

# கல்கி

KALKI 24-1-82 ரூ.1-20





விளக்கம் கேட்போம், தெளிவு பெறுவோம்!

சிருங்கேரி மகா சன்னிதானம் அருளுரை










## மேடையிலே ஒரு
# மெட்ராஸ் ரௌடி

"அப்போது திருவல்லிக்கேணி சிங்கராச்சாரி தெருவில் இருந்தோம். எனக்குப் பதினைந்து வயது. ராமசாமி பாகவதர் 'சிந்தாமணி' என்ற நாடகத்தின் ரிகர்ஸலை எங்கள் வீட்டுக்கு எதிரில் நடத்திக் கொண்டு வந்தார். ரிகர்ஸலைப் பார்க்க நானும் நண்பர்களும் எதிர் வீட்டுக்குச் சென்றோம். கோபிகையர் கூட்டத்தில் ஒருத்தியாக நடிக்க ஒரு ஆள் குறைந்தது. 'நீ நடிக்கிறாயா?' என்றார் பாகவதர். விடுவேனா அந்த வாய்ப்பை? அந்த நாடகம் வி.பி. ஹாலில் நடந்தது. எக்கச்சக்கமான கூட்டம். என் அம்மாவுடைய கூரைப் புடவை, நகைகளை அணிந்து கொண்டு கோபியர்களில் ஒருத்தியாக மேடையில் தோன்றினேன். எனக்குக் கொடுக்கப்பட்டிருந்த வசனத்தைப் பேசி விட்டுச் சொந்தமாகச்சில வசனங்கள் பேசினேன். கூட்டத்திலிருந்து ஏக கைதட்டல். எனக்குத் தலை கால் புரியவில்லை. இது நடந்து 50 வருடங்கள் ஓடிவிட்டன.

கல்லூரியில் படிக்கும்போது நான் போட்ட ஆங்கில நாடகங்களைப் பற்றி அந்தக் காலத்தில் பிரபல பத்திரிகையாக விளங்கிய 'மெயில்' நாலு வார்த்தைகள் என்னைப் பாராட்டி எழுதியது. அதுதான் என்னைப் பற்றிப் பத்திரிகையில் வந்த முதல் செய்தி.

வேலை நிமித்தமாக பெங்களூர், சிம்லா, லக்னோ, கல்கத்தா, பனாரஸ் என்று பல இடங்களுக்குச் சென்றேன். அங்கும் என் நாடக மோகம் என்னை விட்டபாடில்லை. தமிழ் நாட்டைச் சேர்ந்த நண்பர்களை வைத்துக் கொண்டு ஏகப்பட்ட நாடகங்களைப் போட்டேன். கொழும்புவுக்குச் செல்ல வேண்டியிருந்தது. அங்கேயும் விடவில்லை. யாழ்ப்பாணத் தமிழில் நாடகங்களைப் போட்டேன்.

1949ல் மாற்றலாகிச் சென்னை வந்து சேர்ந்தேன். ஏகப்பட்ட நாடகங்களில் நடிக்கவும் செய்தேன். 1953 ஏப்ரலில்என்னுடைய சொந்தக் குழுவான யுனைடெட் அமெச்சூர்

ஆர்ட்டிஸ்ட்ஸ்'ஸைத் துவக்கினேன். அந்தக் காலத்தில் வசனங்கள் மிகவும் நீளமாக இருக்கும். இந்த நிலையை மாற்ற வேண்டும் என்று நானும், என் நண்பர் பட்டுவும் விரும்பினோம். எங்களுடைய முதல் நாடகம் 'வரதட்சிணை'. அது அமோகமான வரவேற்பைப் பெற்றது. சட்சட்டென்று சுருக்கமாக மாறி மாறிப் பாத்திரங்கள் பேசும் வசனம், மக்களை மிகவும் கவர்ந்தது. அதே முறை தான் இன்றும் தொடர்கிறது.

ஆண்கள்தான் பெண்கள் வேடத்தையும் சேர்த்துப் போட்டு நடித்து வந்தார்கள். என்னுடைய நாடகங்களில்தான் முதன் முதலில் பெண்களை நடிக்க வைத்தேன்.

'மனோரதம்' என்ற நாடகத்தில் எனக்கு ரவுடி வேஷம். என்னால் என்றும் மறக்க முடியாத ஒரு விஷயம், அந்த நாடகத்தில் இடைவேளையில் அமரர் கல்கி பேசும்போது 'தத்ரூபமாக ஒரு மெட்ராஸ் ரௌடியைப் பார்த்தது போலவே இருந்தது' என்று பாராட்டியதுதான்!

என்னுடைய நாடகங்களைப் பார்த்து வந்திருப்பவர்களுக்குத் தெரியும் நாடகத்தில் ஜாதியின்பெயர்களைவைத்துக்கொண்டுயாரும் வரமாட்டார்கள். ஊனமுற்றவர்களைக் கிண்டல் செய்கிற மாதிரி வசனங்கள் இருக்காது. இன்னொரு முக்கியமான விஷயம்: அரசியல் துளிக்கூட இருக்காது. இதனால் எனக்கு அரசியல் நாடகங்கள் பிடிக்காது என்று அர்த்தம் இல்லை. நான் செய்து வந்த அரசாங்க வேலை ஒரு காரணம்.

வாழ்க்கையில் கவலையுற்றிருக்கும் ஒரு மனிதன் இரண்டு மணி நேரம் தன்னை மறந்து சிரித்துவிட்டுப் போனால்அதுவே எனக்குப் பெரிய வெற்றி.

சிலபேர் சொன்னார்கள் சென்னையில் போடும் சபா நாடகங்கள் 'தாம்பரத்தைத் தாண்டாது' என்று: இக்கருத்து தவறானது என்று நிரூபித்தேன் நான். என் நாடகங்கள் சினிமா பாஷையில் சொல்லப்படும் 'பி' சென்டர்களில் கூட அமோக ஆதரவைப் பெற்றன.

கிட்டத்தட்ட முப்பது முழுநீள நாடகங்களைத் தவிர, அரை மணி நேர நாடகங்கள் பலவற்றில் நடித்திருக்கிறேன். வியட்நாம் வீடு சுந்தரம், மௌலி, வெங்கட், விசு போன்றவர்களை உருவாக்கியிருக்கிறேன். எங்கள் குழு தயாரித்த 'எமன் ஏமாந்தான்' என்ற நாடகத்தின் அடிப்படையில் சமீபத்திய அரசியலைக் கலந்து தரப்படுவதுதான் 'காதுல பூ'. 'காதுல பூ' எழுதிய ஜி.கே.வும் எங்களுக்கு முன்பு வசனம் எழுதித் தந்திருக்கிறார். எங்கள் குழுவில் காஸ்ட்யூம் பாயாக ஒத்துழைத்தார் 'சோ'. அதுதான் அவரது நாடக வாழ்க்கையின் தொடக்க காலம். எங்கள் குழுவில் வேலை செய்த சுந்தரம் (வியட்நாம் வீடு) இன்று பெரிய வசனகர்த்தா. லட்சுமி, ஜெயலலிதா, நாகேஷ், சுகுமாரி, வில்லன் கண்ணன், போன்றவர்களுக்கெல்லாம் எங்கள் குழுதான் குருகுலம்.

பேட்டி: **பிரியன்**









பாவம்!
இனிமே காப்பாத்த முடியாது!

சிமெண்ட்
ஊழல்!
கோர்ட் தீர்ப்பு

ஆர்.வி

அந்துலே

ராஜீவ்

அண்டார்டிகாவிலே வாழுறது, ரொம்ப கஷ்டமாமே!

இந்தியாவிலே வாழுறதை விடவா?

மீண்டும் தி.மு.க. கிளர்ச்சிகள் – அறிவிப்பு

சீட்-பெல்ட் இருக்கு.. கவலை இல்லே!

மக்கள் ஆதரவு

# அகப்பட்டுக் கொள்ளாத அந்துலேக்கள்!

**1954.** ராஜாஜி சென்னை ராஜ்யத்தின் முதல் மந்திரி பதவியிலிருந்து விலகியதும் தமது உதவியாளரை அழைத்து, தமது வீட்டில் இருந்த கோப்புக்கள் போன்ற சில அரசுடைமைப் பொருள்களை அரசு அலுவலகத்துக்குக் கொண்டு போகச் சொன்னார். சற்று நேரத்துக்குப் பிறகு கடித உறைகளைப் பிரிப்பதற்கு ஏற்பட்ட 'பேப்பர் கட்டர்' ஒன்று பின் தங்கி விட்டதை உணர்ந்தார். உடனே அதை ஓர் உறையிலிட்டு அரசாங்கப் பிரதமக் காரியதரிசியிடம் நேரில் சேர்ப்பித்து வருமாறு தமது வீட்டுப் பணியாளரிடம் கொடுத்து அனுப்பினார்!

அருகிலே இருந்த மீ. ப. சோமுவுக்குப் பிரமிப்பாக இருந்தது. ''என்ன இரண்டரை ரூபாய் பெறுமானமுள்ளதாய் இருக்குமா அது?'' என்று கேட்டார்.

ராஜாஜி புன்னகையுடன், ''அது வாங்கப்பட்டபோது அந்நாளைய மதிப்புப்படி முக்கால் ரூபாய்தான் இருக்கும்'' என்றார்!

அத்துடன் அது சம்பந்தமான உரையாடல் முடிந்தது. ஆனால் முக்கால் ரூபாய் பெறுமானமுள்ள அரசாங்கப் பொருளை, சொந்தத்தில் ஒரு ரூபாய் செலவு செய்து திருப்பி அனுப்பிய ராஜாஜியின் நேர்மை மீ. ப. சோமுவின் மனத்தில் ஆழப் பதிந்தது. 28 ஆண்டுகளாகியும் மறக்காத அந்த நிகழ்ச்சியை அவர் அண்மையில் நடந்த ராஜாஜி நினைவு விழாவில் குறிப்பிட்டார்.

பேப்பர் கட்டரின் மதிப்பு இரண்டரை ரூபாயாக இருக்கலாம், முக்கால் ரூபாயாகக் கூட இருக்கலாம். ஆனால் அதை அரசு அலுவலகத்துக்குத் திருப்பி அனுப்பவில்லை என்றால் தமது நேர்மையும் ஒழுக்கமும் பைசா பெறாது என்று கருதினார் ராஜாஜி!

இத்தகைய ஒழுக்க சீலர்கள், ஜனநாயகப் பண்பாளர்கள் செங்கோல் ஓச்சிய பாரத நாட்டில் இன்று எங்கு பார்த்தாலும் அந்துலேக்களின் ஆட்சி! ஒரு அந்துலே அகப்பட்டுக் கொண்டார்; வேறு பலருக்கு இன்னும் வேளை வரவில்லை.

அந்துலே சமர்ப்பித்த ராஜினாமாவை அன்றைக்கே பிரதமர் ஏற்றுக் கொண்டிருந்தால் பிரதமரின் கௌரவம் பிழைத்திருக்கும். ஆனால் அந்துலே அப்படியொன்றும் பெரிய தவறு செய்து விடவில்லை என்று கூறி அவருக்குப் பாதுகாப்புத் தர முயன்ற பிரதமர், வேறு பல சந்தேகங்களுக்கு இடமளித்ததுடன், ஓர் அநீதிக்கு உடந்தையாக இருந்த குற்றத்தையும் புரிந்தவராகிறார். அந்துலே சார்பில் நாடாளு மன்றத்தில் வாதாடி உண்மைக்குப் புறம்பாகப் பேசவேண்டிய துர்ப்பாக்கியத்துக்கு உள்ளான ஆர்.வி.யும் இவ்விதத்தில் குற்றவாளியே. அந்துலேயின் காரியங்களை நியாயப்படுத்த முயன்ற ராஜீவ் காந்தியும் குற்றவாளியே.

இவையெல்லாம், தெரியாமல் செய்துவிட்ட தவறுகள் அல்ல. தெரிந்தே செய்யப்பட்ட குற்றங்கள். இருந்தும் அதுபற்றி அவர்கள் கவலைப்படுவதாகவோ வருந்துவதாகவோ காணோம்! நடக்கக் கூடாதது எதுவுமே நடந்து விடவில்லை என்பதுபோல் காரியங்கள் தொடர்கின்றன. நமது ஜனநாயகம் இந்த அளவுக்குத் தாழ்ந்து விட்டது!

கறுப்புப்பணம் வைத்திருப்பது கெட்டிக்காரத்தனம், லஞ்சம் வாங்குவது சாமர்த்தியம், ரெய்டு நடப்பது பெருமை என்றெல்லாம் நினைக்குமளவுக்கு இன்று நிலைமை மாறிவிட்டது. இந்த இழிநிலைக்கு முக்கிய காரணம் ஆட்சிப் பொறுப்பில் இருப்போர் கையாளும் பெர்மிட் - லைசென்ஸ் - கோட்டா முறை பொருளாதாரக் கொள்கைகளே.

ராஜாஜி உபதேசித்த ''குறைந்தபட்ச ஆட்சி; அதிகபட்ச சுதந்திரம்'' என்ற தாரக மந்திரத்தைப் பின்பற்றினாலன்றி மேன்மேலும் பல அந்துலேக்கள் இந்நாட்டில் தோன்றியபடிதான் இருப்பார்கள்.

மனிதனுக்கு இயல்பாக உள்ள சுயநலத்தைத் தேச நலனுக்குப் பயன்படுத்திக் கொள்வது ராஜாஜி உணர்த்திய சாணக்கியம். இயல்பாக மனிதன் உள்ளத்தில் இருக்கிற சுயநலச் சிறு பொறியைப் பெருந்தீயாக வளர்த்து அதிலேயே அவனைப் பொசுங்கிப் போகச் செய்வது இன்றைய ஆட்சியாளர் கடைப்பிடிக்கும் கொள்கை.




1982 ஜனவரி 24

துன்மதி தை 11

மலர்: 40 இதழ்: 26


**கல்கி**



தமிழ்த்திரு நாடு தன்னைப் பெற்ற எங்கள்
தாயென்று கும்பிடடி பாப்பா -பாரதியார்

# ரவிகுல திலகன்

## செம்பியன்

### சென்ற வாரம்...

சீனத்திலிருந்து வந்த ஒரு மல்லன் உயிரைப் பணயம் வைத்து அறை கூவுகிறான் சோழநாட்டில் தன்னை வெல்பவர் உண்டோ என்று. இளவல் விஜயாலயன் அவனுடன் மோதி வெல்கிறான். தன் உயிரை இளவரசனுக்குக் காணிக்கையாக்குகிறான் சீனன். விஜயாலயன் அவன் வீரத்தை மெச்சித் தனது மெய்காவலனாக்கிக் கொள்கிறான்.

வீர விளையாட்டு முடிந்து நீராடுகிறான் விஜயாலயன். அப்போது உத்தம சீலியின் நினைவிலே மயங்குகிறான். முத்தரையர் குலத்தைச் சேர்ந்தவளான அவள் பேரழகி என்று கவிதைபாடி வர்ணித்ததுடன் அவள் ஓவியத்தையும் தீட்டித் தந்திருந்தான் சித்திரக் கலைஞனான ஒரு புலவன். அவளை மணம் முடிக்க விரும்பி தன் ஒற்றர் தலைவன் ஆகவமல்லனை தூது அனுப்பியிருந்தான் விஜயாலயன்.

ஆகவமல்லன், திரும்பி வந்து ''இளவரசே நான் கடமையில் தவறிவிட்டேன்; என்னை மன்னியுங்கள்'' என்று கூறி விஜயாலயனின் கோபத்துக்குப் பயந்து அவன் பாதங்களைப் பற்றிக் கொள்கிறான். முத்தரையன் அரசவையிலே ஒரு தளபதி விஜயாலயனை விகாரமானவன் என்று ஏளனம் செய்ய, அதைக்கேட்டு உத்தமசீலி சிரித்துவிட்டாள் என்று தெரியப்படுத்தும் போதே விஜயாலயனின் உடம்பு ஆத்திரத்தால் பதறுவதை ஆகவமல்லனால் உணர முடிகிறது....

## 2

சங்க நூல்களில் இடம்பெறும் கரிகாலன், கிள்ளி வளவன், நலங்கிள்ளி, நெடுங்கிள்ளி போன்ற மாபெரும் சோழ மன்னர்களின் ஆட்சிக் காலத்துக்குப் பிறகு பல நூறு ஆண்டுகள் சோழ வம்சம் நலிவுற்றிருந்தது. வலிமை குன்றி, பிற சக்கரவர்த்திகளுக்குத் திறை செலுத்தும் குறுநில மன்னர்களாய் இருந்து வந்தபோதிலும் அவர்கள் தங்கள் பண்டைப் பெருமையை மறக்கவேயில்லை. என்றாவது ஒரு நாள் சோழர் குலம் மீண்டும் தனது தொன்மையானகீர்த்தியைத் திரும்பப் பெற்றுவிடும் என்று நம்பினார்கள். அடுத்தடுத்த தலைமுறையினர் தம் சந்ததியருக்கு முன்னோர்களைப் பற்றிய வீரக் கதைகளைக் கூறி ஆர்வம் குன்றாமல் பார்த்துக் கொண்டார்கள். சோழப் பேரரசர்களைப் பற்றி வீரக் கதைகளைப் பாடுமாறு புலவர்களை ஊக்குவித்தார்கள். வீரத்தை வெளிக்காட்டி, வெற்றிகளைக் குவிக்கும் வாய்ப்பைப் பல தலைமுறைகளாக யாருமே பெறவில்லை எனினும் அதனால் வீர உணர்ச்சியே மடிந்து போக அவர்கள் விட்டுவிடவில்லை. மாறாக அதைத் தூண்டி வளர்த்துக் கொண்டே வந்தனர். இப்படியே ஏறத்தாழ எழுநூறு ஆண்டுகள் சென்றன. அத்தனை ஆண்டுகளின் ஏக்கங்களை யெல்லாம் ஒன்று திரட்டித் தன் மனத்தில்



பெருஞ் சுமையாக இருத்திக்கொண்ட குமாராங்குசன் சோழ மரபிலே தோன்றினான். பல்லவன் நந்தி வர்மனுக்குத் திறை செலுத்திக் கொண்டிருந்த ஒரு சிற்றரசனே அவன் என்றாலும் 'வீரர் தலைமணி' எனவும், 'கொடையில் கர்ணன்' எனவும், 'நேர்மையான ஒழுக்கமுடையவன்' எனவும்போற்றப் பட்டான். தன் மகனைச் சுதந்திர ஆர்வமுள்ள மாவீரனாக வளர்ப்பது எனத் தீர்மானித்துக் கொண்டான். அவன் மூலம் தன் நெஞ்சை அரித்துக் கொண்டிருந்த ஏக்கங்களுக்கு ஒரு முடிவு காணக் கருதினான். மகனுக்கு விஜயாலயன் என அவனுடைய எதிர்கால வெற்றிகளைச் சோதிடர்கள் கணித்ததற்கு ஏற்பக் காரணப் பெயர் சூட்டினான். அவனை எல்லா வித யுத்தங்களிலும் வல்லவனாக்கினான். போர்த் தந்திரமும் ஆற்றலும் இருந்தால் போதாது. அவை வெற்றிபெற வீர உணர்ச்சி உள்ளத்தில் குமுறி எழ வேண்டும் என அறிந்தவனாதலால் மகன் விஜயாலய



னுக்கு அடிக்கடி அவன் முன்னோர் மிகுந்த செல்வாக்குப் பெற்றுச் சக்கரவர்த்திகளாய் வாழ்ந்த காலத்தை நினைவு படுத்தினான். பின்னர் குறுநில மன்னர்களாகப் பாண்டியருக்கும் பல்லவருக்கும் மாறிமாறிக் கப்பம் செலுத்திக்கொண்டிருந்த அவலநிலையைஎடுத்துரைத்தான். ஒரு கோபக் கனலை இளைஞன் விஜயாலயன் உள்ளத்தில் விதைத்து வீரக் கதைகளால் விசிறி அதனைக் கொழுந்து விட்டெரியச்செய்தான். இளவரசன் வாலிபப் பருவத்தினனாகி வயது ஏற ஏற அவனுடைய கோபமும் வளர்ந்து கொண்டே வந்தது. யாரிடமோ காட்ட வேண்டிய கோபத்தை யெல்லாம் எதிரே வந்தவர்கள் மீதெல்லாம் சொரிந்தான். ''ஆனாலும் இளவலுக்கு இத்தனை கோபம் ஆகாது'' என்று பயத்துடன் அக்கம் பக்கம் பார்த்து அந்தரங்கமாக அரண்மனை ஊழியர்கள் பேசிக் கொண்டனர்! ஆயின் அவர்கள் அந்தக் கோபத்தின் அடிப்படையான ஆழ்ந்த காரணத்தை அறியாதவர்களாக இருந்தார்கள். அது தெரிந்திருந்தால் இளவரசனிடம் அனுதாபமே பிறந்திருக்கும் அவர்களுக்கு.

இப்போதும் கூட விஜயாலயனின் கோபத்துக்கு அஞ்சி அவன் கால்களைப் பற்றிக் கொண்டு தான் பேசினான் ஆகவ மல்லன்.

''பிரபோ! அங்கேயே என் உயிர் போனாலும் போகட்டும் என்று வாளை உருவியிருப்பேன். ஆனால் நான் அங்கு ஒருபோர்வீரனாகச் செல்லவில்லையே! உங்கள் தூதனாக அல்லவா சென்றேன். தூதனுக்குரிய மரபு மீறாதிருக்கவும் உங்கள் கருத்தறியாமல் அசந்தர்ப்பமாக ஏதும் செய்துவிடாதிருக்கவும் நான் ரொம்பவும் சிரமப்பட்டு என் உணர்ச்சிகளை அடக்கிக் கொண்டேன். இளவரசே! ஒற்றர் தலைவனாகிய என்னை நீங்கள் தூதனாக அனுப்பியதே நல்லதாயிற்று. ஒற்றனாக விளங்கத் தங்கள் மேற்பார்வையில் பயிற்சி பெற்றபோது உணர்ச்சிகளை அடக்கிக் கொள்ளவும் கற்றேன் அல்லவா? அது கை கொடுத்தது பிரபோ! நான் பதில் பேசாது திரும்பி விட்டேன். பரிசில்களைச் சுமந்து வந்தவர்கள் அவை நிராகரிக்கப்படவே திரும்பக்கொண்டு வருகிறார்கள். பின்னால் வந்து கொண்டிருக்கிறார்கள். எனது துர்ப்பாக்கியம், தாங்க முடியாத அவமானத்தைப் பொறுத்துக் கொண்டு வாயு வேக மனோ வேகமாக முன்னால் தங்களுக்குச் செய்தி சொல்ல வந்திருக்கிறேன்.''

உலகின் கால் நடைகளில் நாலில் ஒரு பகுதி இந்தியாவில் இருக்கிறது! -ஸ்ரீ ராஜ்



''மூடனே! என்ன உளறுகிறாய்! உனக்கா அவமானம்? அல்லது எனக்குத்தான் தலைகுனிவா? சோழர் வம்சத்துக்கே அல்லவா அவமானம்? சூரிய குலத்துக்கே அல்லவா தலைகுனிவு! புலிக் கொடியும் ஆத்திமாலையும் இகழப்பட்டதாக அல்லவா அர்த்தம்!'' என்று சீறிய விஜயாலயன் தன் கால்களைப் பற்றியிருந்த கரங்களிலிருந்து அதனை உதறி விடுவித்துக் கொண்டான். அந்த வேகத்தில் அவன் கால் ஆகவமல்லனின் மர்மப் பகுதியைத் தாக்கியதோடு அவனை உருட்டித் தள்ளவும் செய்தது. ஆகவ மல்லன் வலி பொறுக்காது, ''ஐயோ!'' என்று வீரிட்டு அலறியபடி வீசி எறியப்பட்ட பந்து போலச் சுருண்டு அப்போதுதான் விஜயாலயன் குளித்து எழுந்த செய்குளத்துக்குள் விழுந்தான்.

அவனைத் திரும்பிக்கூடப் பார்க்காமல், பரபரவென்று வேகமாக சோழ மாளிகையின் மேல்கட்டுக்கு நடந்தான் விஜயாலயன்.

''அப்பா! அப்பா!'' என்று கோபம் தணியாமல் இரைந்து கொண்டே வரும் மகனை ஆர்வமுடன் எறிட்டு நோக்கினான் இராசகேசரி குமாராங்குசன். சாளரத்தின் ஓரம் நின்று ஏதோ ஓலைகளைச் சிரமப்பட்டுப் படித்துக் கொண்டிருந்த அந்த முதியவரின் களைப்புற்ற கண்கள் மகனைக் கண்டதும் எப்படியோ ஒளி பெற்றுப் பிரகாசித்தன.

''வா மகனே! இப்போது என்ன கோபம் உனக்கு? என்ன நடந்தது?''என்று மகிழ்ச்சி ததும்பக் கேட்டான். மகனிடம் கோபக் கனல் அடங்காது கொழுந்து விடுவதே தந்தைக்கு அளப்பரிய குதூகலத்தைத் தந்தது. ''விஜயாலயா! உன் அப்பனும், பாட்டனும், கொள்ளு, எள்ளுத் தாத்தாக்களும் குறுநில மன்னர்களாக வாழ்ந்து சொரணையற்றுப் போனார்கள், நல்லவேளை! நீயாவது கோபப்படுகிறாயே'' என்றான் புன்முறுவலுடன்.

''நிறுத்துங்கள் அப்பா!'' என்ற விஜயாலயன் வலக் கரத்தை முஷ்டியாக்கி இடது உள்ளங்கையில் குத்திக் கொண்டான். முகத்தில் உணர்ச்சிப் புயல் வீச, கண்கள் மின்னின. இடி முழக்கம் போல அவன் குரல் ஒலித்தது. ''அப்பா! இந்தக் கோபக் கனலை என் உள்ளத்தில் வளர்த்த தாங்கள் அதற்கு என்ன காரணம் சொன்னீர்கள்?''

''உன்னுடைய இந்தக் கோபம்தான் ஒரு நாள் இல்லாவிட்டால் ஒரு நாள் எரிமலையாக வெடித்துச் சோழ ராஜ்யத்தை மீண்டும் அதன் மகோந்நத நிலைக்கு உயர்த்த வேண்டும் என்றேன்!''

''அப்படி ஒரு சிறப்பு நிலையை நாடு எய்த நான் மாவீரனாக விளங்க வேண்டும் என்று ஆசைப்பட்டு எத்தகைய ஆபத்துக்கும் அஞ்சாதவனாக என்னை வளர்த்தீர்கள். வீரம் என்பது போர்க் களத்தில் மட்டுமல்ல: மக்களை ரட்சிப்பதிலும் வீரம் காட்டலாம் என்று உணர்த்தினீர்கள்!

''அப்பா! உங்களுக்கு நினைவிருக்கிறதா? ஒரு சமயம் நமது பம்பைப் படை வீட்டில் பெரு நெருப்புப் பிடித்துக் கொண்டது. தீப்பிழம்புகளின் அனலை இங்கே அரண்மனையில் நாம் உணர முடிந்தது! அப்போது

நீங்கள் என்னை இந்தச் சோழ மாளிகையிலிருந்து விரட்டியடித்தீர்கள்! 'போ! போய் அங்கே மக்களுக்கு உதவி செய்!' என்றீர்கள். நானும் உடனே புறப்பட்டேன். அப்போது என் தாய் வழிமறித்து நின்றாள். உங்களிடம் எனக்காகக் கெஞ்சினாள்....''

''நினைவிருக்கிறது மைந்தா! 'பதினாறு வயதுப் பிள்ளையை இந்தப் பெருந் தீயுடன் போராட அனுப்புவார்களா? நமது ஆலயக் கோபுரத்துக்கும் மேலே உயரமாகத் தீ நாக்குகள் ஓங்கியுள்ளனவே' என்றாள். நான் அவளை இப்பால் இழுத்துக் கொண்டுஉனக்கு விடை கொடுத்தேன். 'மக்களுக்குத் துன்பம் நேரும்போது அரண்மனையில் ஒளிந்துகொண்டு என் மகன் நூறு வயது வாழ்வதை விட பதினாறு வருஷமே உயிர் வாழ்ந்து அவர்களுக்கு உதவும் முயற்சியில் வீர சொர்க்கம் புகுவதையே நான் விரும்புகிறேன்'' என்று சொன்னேன்.

'''ஐயோ! என் செல்வமே!' என்று உன் தாய் அலறினாள். 'இந்தச் சோழ குலத்துக்கு இவன் ஒருவனே வாரிசு என்பதை மறந்தீர்களா?' என்று என்னிடம் வாதாடினாள்.

'' 'ஒரு கோழை சோழ நாட்டை ஆள்வதை விட சோழர் குலம் வாரிசே இல்லாமல் பூண்டோடு அழிந்து ஒழிந்து போவதே மேல்' என்று நான் பதில் சொன்னேன்!''

''ஆம் அப்பா! அதைக் கேட்டபோது எனக்கு எப்படி மெய் சிலிர்த்ததுதெரியுமா?'' என்றான் விஜயாலயன் சற்றுக் கம்மிய குரலில். பிறகு தொடர்ந்து பேசலானான். ''அந்த இரவை என்னால் மறக்கவே முடியாது தந்தையே! பம்பைப் படை வீட்டைச் சேர்ந்த பலர் திக்குத் திசை தெரியாது சிதறி ஓட நமது வீரர்கள் எல்லோரும் திகைத்துச் செயலற்று நிற்க, நாலாபுறமும் தீயினால் சூழப்பட்டிருந்த பல பெண்களும் குழந்தைகளும் 'ஐயோ! காப்பாற்றுங்கள்!' என்று அலறுகிற ஒலி என் செவிகளைத் தாக்கியது.

''நான் வீரர்களை ஓர் அவசரத்தோடு அதட்டி ஒழுங்கு படுத்தினேன். இருபது வரிசைகளில் அவர்கள் நின்று அரிசிலாற்றிலிருந்து பிரிந்து வரும் கால்வாயில் நீர் மொண்டு கை மாறி கை மாறிக் கொணர்ந்து நெருப்பை அணைக்க ஏற்பாடு செய்தேன். இதற்குச் சிறிது நேரமாயிற்று. இதற்குள் தீயினால் .சூழப்பட்டிருந்த சில பெண்கள்—குழந்தைகளின் தீனமான அபயக் குரல்கள் ஓங்கி ஒலித்தன. இனிமேலும் பொறுக்க முடியாதென்று நான் விரைந்து பரவும் தீக்கரங்களுக்கிடையில் கிடைத்த சந்துகளில் புகுந்து முன்னேறினேன். புகை நெஞ்சில் புகாதிருக்க மூச்சைப் பிடித்துக் கொண்டு செயல்பட்டேன்!''

''விஜயாலயா! அன்று இரவு ஐந்து பெண்களையும் பத்துக் குழந்தைகளையும் நீ காப்பாற்றினாய். பெருமிதத்தால் என் நெஞ்சு பூரித்தது. சில நாட்களில் மந்திரி பிரதானிகள், சேனாதிபதிகள், நாட்டதிகாரிகள், அறநிலையக் கண்காணிப்பாளர்கள் அனைவர் முன்னிலையிலும் உனக்கு




'ரவிகுல திலகன்' என்று விருது சூட்டி மகிழ்ந்தேன். அன்றே உனக்கு இளவரசுப் பட்டமும் கட்டினேன்!''

''விருது! அதனால் என்ன பயன்? கட்டியம் கூறுவோர் அறிவிக்க மேலும் ஒரு முழக்கம்! அவ்வளவுதானே? அப்பா! தீயிலிருந்து பெண்டு பிள்ளைகளைக் காப்பாற்ற நான் முற்பட்டபோது என் தலை முடியெல்லாம் பற்றி எரிந்து பொசுங்கிப் போய்ச் சொட்டை விழுந்து விட்டதே. அதை இளவரசுப் பட்டம் திரும்பப் பெற்றுத் தருமா? என் முகத்தின் ஒரு பக்கம் முழுவதும் தீயினால் வெந்து புண்ணாகி விகாரப்பட்டுப் போனதே அதைத் தாங்கள் அளித்த விருது சீராக்கித் தருமா? எனது ஒரு கண் பார்வையை இழந்து விட்டதே அதற்கு மீண்டும் என்றேனும் ஒளி திரும்புமா?

''அப்பா! என் புண்கள் மெல்ல மெல்ல ஆறினாலும் தழும்புகள் என்றும் மறையாது என்பதைக் கண்டு தன் மகனின் அழகெல்லாம் சீர்குலைந்து விட்டதைப் பார்த்து அந்தச் சோகத்தைத் தாங்க முடியாமல் என் தாய் புலம்பினாள்; துடித்தாள்... அவளுக்கு ஆறுதல் கூறுவதற்குப் பதிலாக...''

''நான் ஆறுதல்தான் சொன்னேன் மகனே. ஆனால் அவள் புரிந்துகொள்ளவில்லை! என் சொற்களின் பின்னணியில் இருந்தஏக்கம் எழுநூறுஆண்டு காலஅடிமைத் தனத்தின் வெளிப்பாடு! நான் சொன்னதில்தான் என்ன தவறு? 'மகாராணி! உன் மகனின் புற அழகு போய்விட்டதே என்று அழலாமா நீ? என்ன அசட்டுத்தனம்! வீரம்தான் ஆண்களுக்கு அழகு என்பது தெரியாதா உனக்கு? அப்படி நோக்கினால் இத்தனை வடுக்களை உடலில் கொண்டிருக்கும் இவனை விடச் சிறந்த அழகன் யாருண்டு?' என்றுதானே கேட்டேன்?''

''ஆனால் அம்மாவினால் அந்த வாதத்தை ஏற்க முடியவில்லையே அப்பா. தீப்புண்களுடன் என்னைப் பார்த்த துயரத்திலேயே அவள் உடல் நலிந்து. மெலிந்து செத்துப் போனாள் அல்லவா? அவள் சாகும் தறுவாயிலிருந்தபோதுகூட நீங்கள் அவள்

மனத்தை மேலும் வருத்தினீர்கள்! 'உன் மகன் அக்கினித் தேவனை வென்றது போதாது! இப்போது அடைந்துள்ள விழுப்புண்களும் காணாது! இன்னும் எத்தனையோ மாறுபட மன்னர்களை அவன் வெல்லவேண்டும். 'பல போர்க் களங்களைக் கண்டு குறைந்தது நூறு விழுப்புண்களையாவது பெறவேண்டும்' என்று ஆசிகூறு' என்றீர்கள். அவள் உங்கள் சொல்லைத் தட்ட முடியாமல் கண்களில் நீர் வடிய என் சிரத்தின் மேல் கரம் வைத்தாள். ஓரிரு விநாடிகளில் அங்கே அன்பு கலந்த ஆசி நல்கி நிலைத்த கரம் பின்னர் துவண்டு விழுந்தது. அவள் கதையும் முடிந்தது....''

''மறக்காதே மகனே! உன் தாயின் மரண வாக்குமூலம் — இறுதிக் கோரிக்கை — அதை நிறைவேற்றுவாயல்லவா?''

''தருணம் வாய்க்கட்டும் தந்தையே, தரணியையே ஆள்வேன். ஆனால் நான் இங்கு தேடிவந்த விளக்கம் வேறு. வீரம்தான் ஆண்மகனுக்கு அழகு என்றும் ஒருவனுக்குள்ள விழுப்புண்கள் அவன் வீரத்துக்குச் சான்றிதழ்கள் என்றும் திரும்பத் திரும்பச்சொல்லித் தந்தீர்கள். நானும் அதைப் பெருமையாக நினைத்தேன். ஆனால் முத்தரையர் குலத்தில் உதித்த அரச குடும்பத்தைச் சேர்ந்த அந்தப் பேரழகி — உத்தமசீலி — அப்படி நினைக்கக் காணோமே? என்னை நிராகரித்தது மட்டுமின்றி அழகற்றவன் என்று கேலி செய்தும் விட்டாளே! அப்பா உங்கள் அனுமதியுடன் நானே தூது அனுப்பினேன்! அவமானத்துடன் திரும்பி யிருக்கிறேனே!''

''அப்படியா!'' என்று ஒரு கணம் திகைத்த குமாராங்குசன், ''அப்படியானால் அவள் உத்தமசீலி என்ற பெயர் தாங்கவும் உன்னைக் கணவனாக அடையவும் தகுதியற்றவள் என்று பொருள்! அவளை மறந்துவிடு! வேறு அரச குல மகளிருக்கா பஞ்சம்?'' என்றான்.

''அப்பா! சோழர் குலத்துக்கே ஏற்பட்ட இழுக்கை எப்படி இவ்வளவு இலகுவாக உங்களால் ஏற்றுக் கொள்ள முடிகிறது?''

''எளிதாக ஒதுக்கித் தள்ளாமல் வேறு என்ன செய்யப் போகிறாய்?''

''என்ன செய்ய வேண்டும் என்கிறீர்கள் தந்தையே?''

''இப்போதைக்கு நீ வேட்டைக்குப் போய் வரலாம். ஒருவேங்கையையேனும் கொன்று தீர்த்தால் உன் மனக் குமுறல் சற்று அடங்கும். பின்னர் யோசிப்போம்'' என்றான் குமாராங்குசன்.

அரச குடும்பத்தினர் வேட்டையாடுவதற்கென்றே ஒதுக்கப்பட்ட கானகப் பகுதியில் தாரைதப்பட்டைகள் முழங்கின. அந்தக் காது செவிடுபடும் ஓசையைக் கேட்டு அரண்டு போன மான்களும் முயல்களும் நாலு திசைகளிலும் சிதறிப் பாய்ந்தன. ஒரு புதர் மறைவிலிருந்து இரு காட்டுப் பன்றிகள் வெளிப்பட்டு வருவதை விஜயாலயனின்கூரிய கண் பார்த்து விட்டது. கரும் புரவி பரணி மீது ஆரோகணித்திருந்த விஜயாலயன் விரைவாய் அவற்றைப் பின்தொடர்ந்தான். கானக மரங்களின் கிளைகள் தாழ்வாகப் படர்ந்துவளர்ந்திருந்ததால் விஜயாலயனுடன் வந்திருந்த இதர குதிரை வீரர்களும் காலாட்களும் அதே அளவு வேகம் காட்ட முடியவில்லை. ஆனால் விஜயாலயன் அடிக்கடி கண்ணிமைக்கும் நேரத்தில் குனிந்து பரணியின் கழுத்தோடு கழுத்தாகத் தன்னை ஒட்டிக்கொண்டு பன்றிகளைத் துரத்தினான். நொடிப் பொழுதும் அவற்றைத் தன் பார்வையிலிருந்து அவன் அகல விடவில்லை. மற்றவர்கள் தடைப்பட்டு நின்றுவிட, விஜயாலயன் மட்டுமே ஆவேசம் காட்டினான். முட் புதர்களும், மரங்களின் ஒடிந்த கிளைகளின் கூரிய முனைகளும் தன் உடலைக் குத்திக் கிழிப்பதையும் அவன் பொருட்படுத்தவேயில்லை. அத்தனை ஆத்திரம் அவனுள் குமுறிக் கொண்டிருந்தது. திக்குத் திசை புரியாமல் நீண்ட தூரம் துரத்தி வந்த பின்னர், ஏறத்தாழ செங்குத்தான ஒரு பாறை எதிர்ப்பட பன்றிகள் வலப்புறமா, இடப்புறமா எத்திக்கில் ஓடுவதென ஒரு கணம் திகைத்து, ஒன்றுக்கொன்று முரணாக முடிவெடுத்துத் திரும்பி ஒன்றன் மீது ஒன்றாக மோதிக் கொண்டு தடுமாற, அப்போது விஜயாலயன் யார்மீதோ இருந்த ஆத்திரத்துடன் தன் கைவேலின் கூரிய முனையை ஒரு பன்றியின் கழுத்தில் பாய்ச்ச அது துளையிட்டுப் பன்றியைப் பூமியுடன் சேர்த்துக் குத்திச் சிறைப்படுத்தி விட்டது. அது பயங்கரமாக ஒரு முறை அலறி அடங்க, குருதி பீறிட்டுப் பூமியை நனைக்க, மற்றொரு பன்றி தன் துணைக்கு நேர்ந்த கதியைப் பார்த்து உசுப்பி விடப்பட்டதாலோ அல்லது மேலே செல்லப் போக்கிடம் தெரியாததாலோ அல்லது ஓடி ஓடி அலுத்து விட்டதாலோ நின்று திரும்பிசிலிர்த்துக் கொண்டது உடலை. இதே கணத்தில் பரணியும் பாறை அருகே வந்து மேலே செல்ல முடியாமல் சரேலென்று நின்று முன்னங் கால்களை உயர்த்த, விஜயாலயன் நிலை தடுமாறினான். பன்றியும் பக்கவாட்டிலிருந்து பாய்ந்தது. விஜயாலயனை இடி விழுந்தாற்போல் தாக்கித் தள்ளியது. அவன் மீதே அதுவும் சரிய, விஜயாலயன் இடையிலிருந்த குத்தீட்டியைப் பன்றியுடன் உருண்டு புரண்டவாறே எப்படியோ உருவினான்.

இதே நேரத்தில் அருகிலேயே இருந்த ஒரு மரத்தின் கிளைகளினூடே மறைவாகப் பதுங்கியிருந்த ஒரு சிறுத்தையும் இலேசாக அசைந்து கொடுத்துத் தருணம் பார்த்தது. சற்றுத் தொலைவில் குருதி வாடையை நுகர்ந்த சில ஓநாய்கள் ஓசை எழுப்பாமல் இவ்விடத்தை நோக்கி எச்சரிக்கையுடன் நடந்தன.

செங்குத்துப் பாறையின் அடிவாரத்தில் மனிதனுக்கும் மிருகங்களுக்கும் இடையில் நடக்கும் இந்தப் போராட்டத்தை அதே பாறையின் உச்சி முகட்டில் நின்றபடி விசித்திரமான அலங்காரத் தோற்றமுடைய அதிரூபவதியான ஒரு யௌவனப் பெண் அடங்கா ஆர்வத்துடன் பார்த்துக் கொண்டிருந்தாள்!

(தொடரும்)

# முடி வளர்க்கும் மூலிகை மருந்துகளை உங்களுக்காகவே உருவாக்கி இருக்கிறோம்!















**பண்டைய சித்தர்கள் ஆராய்ந்து பயன்படுத்திய முடிவளர்க்கும் மூலிகை மருந்துகளை இப்பொழுது நீங்களும் பயன்படுத்தலாம்!**

பழமையின் மெய்ஞான வலிவும்
புதுமையின் விஞ்ஞானப் பொலிவும்
ஒன்றாக இணைந்து உருவாகியுள்ள
நன்மை பயக்கும் ஆராய்ச்சி மருந்துகள்!

- முடி உதிர்தல் நின்று, கருகரு என்று மயிர் வளரும்!
- இளநரை மாறும்! புழுவெட்டில் மயிர் முளைக்கும்!
- பொடுகு, பேன், ஈறுகள் அடியோடு மறையும்!
- குளுமையும், புத்துணர்ச்சியும் உண்டாகும்!
- ஞாபக சக்தி வளரும்! நன்கு தூக்கம் வரும்!

**கிரௌன் ஹெர்பல் ஹேர் க்ரீம்**
**(HERBAL HAIR CREAM)**
முற்றிலும் மூலிகைச் சத்துக்கள் அடங்கிய இனிய நறுமணமும் குளுமையும் இணைந்த முடிவளர்க்கும் மூலிகை ஹேர் க்ரீம்

**கிரௌன் ஹெர்பல் ஹேர் டானிக்**
**(HERBAL HAIR TONIC)**
பரிசுத்தமான தேங்காய் எண்ணெயில் பரிமளமும் குளுமையும் பரவி நின்று கார்முகில்போல முடிவளர்க்கும் கூந்தல் தைலம்

**கிரௌன் ஹெர்பல் ஹேர் கேர்**
**(HERBAL HAIR CARE)**
குன்றாத நுரையையும், நறுமணமும், ஒன்றாக விரவி நின்று நன்றாக முடிவளர்க்கும் முதன்மையான மூலிகை ஷாம்பு

**கிரௌன் முடிவளர்க்கும் மூலிகை மருந்துகள்— உங்கள் கேசத்தைப் பாதுகாக்கும் இயற்கை நிவாரணிகள்!**

தயாரிப்பாளர்கள்:
**கிரௌன் ஹெர்பல் ப்ராடக்ட்ஸ்**
**(CROWN HERBAL PRODUCTS)**
55, ஹாரிஸ் சாலை, புதுப்பேட்டை,
சென்னை-600 002
(எழும்பூர் மாஜிஸ்ட்ரேட் கோர்ட்டுக்கு எதிரில்)




Siddhar

சுற்றுலா வர்த்தகப் பொருட்காட்சியில் அமைந்திருக்கும்
எங்கள் அரங்கிற்கு வருகை தாருங்கள்

நாலு வடம் சங்கிலி. பாம்பே கட்டிங் வளையல் ஏழு ஜோடி. கல்வளை இரண்டு ஜோடி. கண்ணைப் பறிக்கும் கல் நெக்லஸ், மற்றும் மோதிரம், நெளிவு தோடு வகையருக்கள். ஐம்பது பவுனுக்கும் மேல் நீலாவுக்கு வேண்டிய நகைகள் தயாராக இருந்தன. பளிங்கால் பதிக்கப்பட்ட அந்தப் பெரிய வீட்டுக்கு நீலா ஒரே வாரிசு.

அவ்வளவு மதிப்புள்ள நீலாவைக் காணவில்லை.

பதறியவாறு கணவருக்கு ஃபோன் செய்தாள் பார்வதி. குருநாதன் ஸ்கூட்டரில் பறந்து ஓடிவந்தார்.

''நீங்க கடைக்குப் போனதும் காந்தி நகரில் லலிதாவைப் பார்க்கப் போறேன்னு சொல்லிட்டுப் போனா. சாப்பாட்டு நேரத்துக்கு வறதாச் சொன்னா. வரல்லெ. காந்தி நகருக்கு ஆள் அனுப்பிச்சேன். லலிதா வீட்டுக்கு நீலா வரவேயில்லையாம்.''

பதற்றத்துடன் கேட்டுக் கொண்டிருந்த அவருக்குப் பொறி தட்டியது. ஸ்டீல் பீரோ இருந்த அறைக்கு ஓடினார்.

பீரோவுக்குக் கீழே ஒரு கசங்கிய கடிதம் குருநாதன் கண்களுக்குத் தட்டுப்பட்டது. எடுத்துப் பார்த்தார்.

''நான் நினைச்சது சரியாப் போச்சு. எல்லாம் உன் மக வேலைதான். கள்ளச் சாவி போட்டுப் பீரோவைத் திறந்திருக்கா. நகை எல்லாம் எடுத்துக் கொண்டு ஓட்டம் பிடிக்கப் பார்த்திருக்கா. உள்ளறையைத் திறக்க முடியலெ. அதனாலெ நகைகள் தப்பிச்சிருக்கு.''

''நம்ம நீலா எங்கே போயிருப்பா?''

''அவதான் ஓடிப்போயிட்டான்னு சொல்றேனே.''

''சிவசிவா! நம்ம பொண்ணைப் பத்தி இப்படியெல்லாம் சொல்லாதீங்க.''

காகிதத்தை மனைவியிடம் காட்டினார்.

'காட்சி மண்டபம்... 11 மணி... நகை டிரஸ்ஸோட வரணும்... காரோடு தயாராக இருப்பேன்.''

மொட்டைக் கடிதம்தான்.

கண்களில் நீர் கொப்பளிக்கக் கணவரை நோக்கினாள் பார்வதி.

''இத நான் லேசில விடப் போறதில்லெ.''

உறுமியவாறு ஸ்கூட்டரில் ஏறிக் கிளம்பினார்.

# இரண்டாவது தாலி

எம்.கே.சங்கரன்







காட்சி மண்டபம் வந்தாயிற்று. அங்கிருந்தும் இங்கிருந்தும் போவோர் வருவோர்.... யாரிடம் கேட்க முடியும்? சற்று நேரம் நின்று எதுவும் புலப்படாமல் சந்திப் பிள்ளையார் கோயில் முக்கை நோக்கிச் சென்றார்.

டாக்சி ஸ்டாண்ட் சந்திப் பிள்ளையார் கோவில் முக்குத்தான். டாக்சி டிரைவர் வேலு குருநாதனைக் கண்டு ஓடிவந்தான். அவருக்கு அவன் பரிச்சயமானவன். வேலுவிடம் கேட்டால் விவரம் தெரியலாம். அவனைத் தனியாக அழைத்துச் சென்றார்.

''வேலு, இங்கிருந்து காட்சி மண்டபத்துக்கு ஏதாவது டாக்சி போச்சுதா?'' தயங்கித் தயங்கிக் கேட்டார்.

''ஆமா முதலாளி. உங்க தெரு தரகர் குப்புசாமி செவந்தி காரைப் புடிச்சிக்கிட்டு பேட்டை ரோட்ல போறாங்க...''

''தரகன் குப்புசாமியா....'' ஒரு கணம் திகைத்தார்.



வேலு அங்கு நின்ற மற்ற டாக்சிக்காரர்களை விசாரித்துவிட்டு வந்தான்.

''குப்புசாமி மகனுக்குக் கல்யாணமாம். பெண் அழைச்சுக்கிட்டுச் சாத்தங்குளம் போறாங்களாம்.''

அவர் உடம்பு குலுங்கிற்று. அந்தப் பெண் நீலாவாக இருக்க முடியுமா? அந்தத் தரங்கெட்ட குடும்பத்துப் பையனிடம் நீலா எப்படிப் பழகினாள்?

வேலுவிடம் டாக்சியை வீட்டுக்குக் கொண்டு வரும்படி சொல்லிவிட்டு வீட்டை நோக்கி விரைந்தார்.

நீலாவின் பள்ளித் தோழி லலிதா நீலா வந்துவிட்டாளா என்று விசாரிக்க வந்திருந்தாள். அவள் மூலம் நீலாவின் விஷயங்கள் வெளிப்பட்டன. நீலா பள்ளிக்குப் போகும் போதும் வரும்போதும் தரகர் மகன் நம்பி வழியில் சந்தித்துப் பேசுவாளாம். ஒரு நாள் நீலா கிளாஸைக் கட்பண்ணிவிட்டு அவன் கூட மாட்னி ஷோ சினிமாவுக்குக் கூடப் போனாளாம்.

தரகன் வீட்டுக்கு ஓர் ஆள் அனுப்பிப் பார்த்ததில் வீடு பூட்டப்பட்டிருந்தது. தரகன், மகனைக் கண்டிக்கிறதுக்குப் பதிலாக அனுசரணையாக இருந்து கள்ளத் தாலி கட்டி வைக்க முயற்சி செய்திருக்கிறான் என்பது புரிந்தது. கேடுகெட்ட அந்தப் பயலின் முயற்சியை முறியடிக்கணும் என்று வீறுகொண்டு எழுந்தார்.

வேலுவின் டாக்சி வந்தது. சாலியர் தெருவுக்குப் போய், சண்டியர் ராக்கப்பனையும் அவன் அடியாட்கள் சில பேரையும் அழைத்துக் கொண்டு சாத்தான் குளம் நோக்கிச் சென்றனர்.

மாஜி பஞ்சாயத்து போர்டு தலைவர் ஒருவரின் தலைமையில் நம்பி நீலாவின் கழுத்தில் தாலி கட்டி விட்டான். மணமக்களை வாழ்த்திக் கொண்டிருக்கும் நேரம் குருநாதன் அடியாட்களோடு வந்து பந்தலுக்குள் புகுந்தார். முதலில் குப்புசாமி குருநாதனைக் கண்டதும் வெலவெலத்துப் போனார். தாலி கழுத்தில் ஏறிவிட்டது என்ற தைரியம் ஏற்படவே, தோளில் கிடந்த துண்டை இடுப்பில் கட்டிக் கொண்டு, ''வாங்க வாங்க!'' என்று வரவேற்க ஆரம்பித்தார்.

''டேய் தரகா! என் எதிரில் நிற்க உனக்கு யோக்கியதை உண்டா? எனக்குத் தெரியாமல் என் மகளை உன் மகனுக்குக் கல்யாணம் கட்டிவைக்க உனக்கு எவ்வளவு துணிச்சல் இருக்கணும்?'' குருநாதன் ஆத்திரத்தில் குமுறினார்.

''சின்னஞ் சிறுசுகள் ஆசைப்பட்டது. நீங்க தடுத்திடக் கூடாதுன்னுதான்...''



''இப்பவும் சும்மா விட்டுட்டுப் போயிடுவேன்னு நினைக்கிறியா?''

''முதலாளி அப்பிடிச் சொல்லக் கூடாது. தாலி கட்டி முடிஞ்சாச்சு. பிள்ளைகளை ஆசிர்வதியுங்க.''

''ஆசிர்வாதமா? செய்யறேன்.''

குருநாதன் நீலாவின் அருகில் சென்றார். தந்தையின் குரூரமான முகத்தைக் கண்டு நீலா மிரண்டாள். படக்கென்று அவள் கழுத்தில் கிடந்த மஞ்சள் கயிறைப் பற்றி இழுத்தார். பட்டென்று அறுந்து கையோடு வந்தது தாலி. நீலாவின் பக்கத்திலிருந்த நம்பியின் முகத்தில் வீசி எறிந்தார். நீலாவின் கையைப் பற்றித் தரதரவென்று இழுத்துக் கொண்டு போனார்.

குப்புசாமி குறுக்கே வந்தார்.

''முதலாளி, நடந்தது நடந்து போச்சு. சின்னஞ் சிறுசுக வாழ்க்கையைப் பாழாக்காதீங்க'' என்று மன்றாடினார்.

''ராக்கப்பா! என்னை எவன் தடுத்தாலும் சரி. கண்ட துண்டமா வெட்டி எறி'' என்று உத்தரவிட்டார்.

ராக்கப்பன் உறுமியவாறு பளபளவென்று நீட்டிய அரிவாளைத் தூக்கிப் பிடித்தான். ''டேய், எவனு இருந்தாலும் விலகிப் போயிடு. இல்லேன்னு கொலை விழும்'' என்று கர்ஜித்தான். அடியாட்கள் வேல் கம்பால் குப்புச்சாமியையும் நம்பியையும் பலமாகத் தாக்கினர்.

தலைவர் பதற பீதியுடன் எல்லோரும் ஓட ஆரம்பித்தனர். தரகரும் அவர் மனைவியும் மகனை இழுத்துக் கொண்டு பந்தலை விட்டு ஓடிப் பதுங்கிக் கொண்டனர். குருநாதன் நீலாவை வெற்றிகரமாக இழுத்துக் காரில் பற்றிக் கொண்டு பறந்தார்.

''இந்தா உன் மகள்'' — நீலாவைத் தாயிடம் தள்ளிவிட்டு அவசரமாகப் பின் பக்கம் சென்றார்.

இரவு தரகர் குப்புசாமி கல்யாணத்துக்குத் தலைமை வகித்த தலைவரையும் இன்னும் சிலரையும் அழைத்துக் கொண்டு வந்து குருநாதன் வீட்டு முன் நின்றார். தலைவர் எல்லோரையும் வெளியே நிற்கச் சொல்லி விட்டுக் குருநாதனைச் சந்தித்தார்.

குருநாதன் நிதானத்துக்கு வந்திருந்ததால் தலைவரை வரவேற்று உட்காரச் சொன்னார்.

''இந்த ஜோக்கை யாரும் தன்னதுன்னு சொல்ல மாட்டாங்கன்னு எப்படி இவ்வளவு உறுதியா சொல்றே?''

''எனக்குத் தெரிந்து இந்த ஜோக்கை எழுதியவர் இறந்துட்டார்!''

- கீழை அ. கதிர்வேல்



''அந்தத் தரகன் என்னை ஏமாளியா நினைச்சுட்டான். பெத்து வளர்த்த எனக்குத் தெரியாம நடந்த கல்யாணம் செல்லாது. நான் ஒப்புக்கொள்ளவும் மாட்டேன். என் பொண் மேஜராகலே. மைனர்தான். நீங்க விவரம் தெரிஞ்சவங்க. தகப்பன் எங்கேன்னு கேட்டிருக்கலாம். அதுக்கு ஏதாவது காரணம் இருந்திருக்கும்.''

தலைவர் பேச முயன்றபோது, ''கொஞ்சம் இருங்க'' என்று குருநாதன் உள்ளேபோனார். ஒரு கட்டு பணத்தைக் கொண்டு வந்து தலைவர் எதிரில் வைத்தார். ''உங்களால் சமாளிக்க முடியும்'' என்று ஒரே வார்த்தையில் நிறுத்திக் கொண்டார்.

தலைவர் நோட்டுக் கட்டைப் பார்த்துக் கொண்டே இருந்தார்.

''நீங்கள் சொல்றது நியாயம்தான்.''

**வி**டிந்ததும் அவர் கடையில் எடுபிடிப் பையனாக வேலை பார்க்கும் கந்தசாமியின் தாயாரை வரவழைத்தார்.

''உங்க பையனுக்கு என் மகளைக் கட்டி வச்சுடப் போறேன். என்ன சொல்றீங்க?''

அந்த ஏழைத் தாயால் நம்ப முடியவில்லை. செல்வம் படைத்த முதலாளி. மறுப்பதா?

அன்று இரவே ஏழு மணிக்கு கிராமத்து அம்மன் கோவிலில் முகூர்த்தம் வைத்து விட்டார். பத்திரிகை அச்சடித்து ஒரே நாளில் உறவினர் நண்பர்களுக்கு அனுப்பி விட்டார்.

''நீலா, உனக்குப் பெரிய இடம் பாத்து முடிக்கணும்னு இருந்தேன். அதை நீதான் கெடுத்தே. இந்தக் கல்யாணம் ஒழுங்கா முடியணும். நீ ஏதாவது தகராறு பண்ணினியோ உன்னை வெட்டிக் குழி தோண்டிப் புதைச்சுட்டு ஜெயிலுக்குப் போகத் தயாரா இருக்கேன்'' என்று ஒரு அரிவாளைக் காட்டினார்.

அந்தப் பேதை நடுங்கிப் போனாள்.

அம்மன் சந்நிதியில் உறவினர்கள், ஊர்ப் பிரமுகர்கள் முன்னிலையில் கொட்டு மேளம் முழங்க நீலாவின் கழுத்தில் இரண்டாவது தாலியைக் கட்டினான் கந்தசாமி.

**ப**ள்ளியறையில் விடப்பட்ட நீலா கழுத்தில் கிடந்த புதிய தாலியைப் பார்த்துக் கண்ணீர் வடித்தாள். தான் யாருக்கு மனைவி? அவளுக்குப் புரியவில்லை. 'புது மண உற்சாகத்தில் நீலாவின் கரங்களைப் பற்றிய கந்தசாமி அவள் முகத்தைப் பார்த்துத் திடுக்கிட்டான். அவள் கண்களில் நீர் பெருகி வழிந்தது.

''என் கழுத்தில் இரண்டாவது தாலி கட்டச் சம்மதிச்ச உங்களுக்கு என் மறுப்பெல்லாம் தேவையாகுமா?''

''ரெண்டாவது தாலியா?'' தீயை மிதித்தவன்போல் பதறினான் கந்தசாமி. ''தயவு செய்து நடந்ததைச் சொல்லு.''

அவள் எல்லாவற்றையும் சொன்னாள்.

கந்தசாமி சிலையாகிப் போனான். நீலா நின்று கொண்டிருந்தாள். நீண்ட நேரம். எனக்கு என்ன வழி என்ற கேள்விக் குறியாக நின்றாள் நீலா. தன் கடமை என்ன? கந்தசாமிக்குப் புரியவில்லை.

# வீட்டுப்பாடம் செய்ய முடியாத அளவு களைப்பா?



# க்ளூகோன்-டி ®

உங்களுக்கு நம்பகமான
க்ளாக்ஸோஸ்-டியின்
புதிய பெயர்:

## அதிக சக்தி—அவனுக்குத் தேவையான போது.

புத்துணர்ச்சியூட்டும், குளுமையான, சக்தி தரும் க்ளூகோன்-டி. வைட்டமின்-டி, கால்ஷியம் ஃபாஸ்ஃபேட் ஆகியன செறிந்த அசல் க்ளூகோஸ் பவுடர் அடங்கியது. க்ளாக்ஸோ நிறுவனம் அளிக்கிறது. எந்த பானத்திலும் இதனை கலந்து அருந்தலாம். பழரசம், பால், தேநீர், காபி, தண்ணீர் இவற்றிலே கலந்தோ அல்லது நேரடியாகவோ உட்கொள்ளுங்கள். திரும்பவும் பெருகிவரும் சக்தியை உணர்வீர்.

க்ளூகோன்-டி உங்களுக்கு வழக்கமான அதே-பச்சை உறையிலே கிடைக்கிறது.




**க்ளூகோன்-டி** ® சக்தியை மீட்டுத்தர நம்பகமானது. **க்ளாக்ஸோ** நிறுவனம் அளிக்கிறது.

HTB-GLL-7280-TL

''சரி, கட்டிலில் படுத்துக்க.''

அவன் கீழே அப்படியே படுத்துவிட்டான். அவளும் கட்டிலுக்கு மறுபுறம் தரையில் படுத்தாள்.

மறுநாள்.

குருநாதனின் முன்னால் போய் நின்றான். ''உங்க கடைக்கே நான் வரல்லே. நானும் என் அம்மாவும் இந்த ஊரைக் காலி பண்ணிட்டு எங்க ஊருக்குப் போறோம்.''

''ஏன்?''

''உங்க தயவிலே வாழ எனக்குப் பிரிய மில்லே. நீலா சம்மதப்பட்டா என்கூட வரட்டும். நகை நட்டே வேண்டாம். உடுத்தின வஸ்திரத்தோட வந்தாப் போதும். கட்டின கடமைக்காக அவளை வச்சுக் காப்பாத்து வேன். உங்க பணத்துல ஒரு சல்லிக் காசு அனு பவிச்சாலும் என் மானம் மரியாதை போயிடும்''.

''உனக்குப் பெண் கொடுத்ததனால் என் னைக் குறைஞ்சவனு நினைச்சுப் பேசுறியா? என் மக உன்னைப் போல தரித்திரம் இல்லே. உன் குடிசைக்கு என் மகளை அனுப்ப எனக்குத் தலைவிதியும் இல்லே. மரியாதையா இங்கே இருக்கிறதா இருந்தா இரு. இல் லேன்னு வெளியே போ!''

கந்தசாமி விருட்டென்று போய்விட் டான்.

இரண்டுவருடங்களில் நீலா நல்லது கெட் டது தெரிந்த பக்குவ நிலைக்கு வந்துவிட்டாள். ஆனால் தனக்கு ஆன இரண்டு திருமணங் களில் எதை எடுத்துக் கொள்வது. எதைத் தள்ளுவது என்பதை அவளால் கணிக்க முடியவில்லை. நம்பியை மனம் விரும்பி மணமுடித்திருந்தாலும், கந்தசாமி அம்மன் சன்னதியில் கட்டிய தாலிக்கு ஒரு சக்தி இருப்பது அவள் மனத்தில் உறுத்தியது.

தினமும் நீலா கோயிலுக்குப் போக ஆரம் பித்தாள். ''அம்பிகே! எனக்கு ஒரு வழியை நீதான் காட்டணும்'' காந்திமதி அம்மன் சந்நிதியில் மனமுருக வேண்டினான். தரி சனத்தை முடித்துவிட்டுப் பிராகாரத்தில் வந்தபோது...




நம்பி!

''நான் உன்னை மறக்கல. உனக்குக் கல்யாணமானாலும் புருஷங் கூட நீ வாழலி யாமே. நான் தாலி கட்டின பொண்ணை வேறொருவனுக்குக் கொடுத்து ஏமாற்றப் பார்த்தார் உன் அப்பா. அவன் முழிச்சிக் கிட்டான்.... உன்னை நான் கைவிட மாட் டேன். நாளை நான் பம்பாய் போறேன். நீ என்கூட வர்றியா?''

''......''

''நான் உனக்குத் தாலி கட்டினவன்தான். என் கூட வர்றதில் தப்பே இல்லே. காலே அஞ்சு மணி பஸ்ஸுக்கு மதுரைக்குப் போய் அங்கிருந்து ரயிலில் பம்பாய் போயிடணும். உனக்கு வேண்டிய துணி மணி நகைகளையும் எடுத்துக்கிட்டு நாலு மணிக்கே பஸ் ஸ்டாண்டுக்கு வந்துடு.''

அவள் முடிவெடுத்து விட்டாள். அம்பிகை வழிகாட்டுவாள் என்ற நம்பிக்கை.

பஸ் ஸ்டாண்டில் அவளைக் கண்டதும் மலர்ச்சியோடு ஓடிவந்த நம்பி அவள் வெறுங் கழுத்தைப் பார்த்து முகம் சுளித்தான்.

''நகை எல்லாம் எங்கே நீலா?''

''கழட்டி வச்சுட்டு வந்துட்டேன். எனக்கு நகை வேண்டாம். என் அப்பாவின் ஒரு காசு கூட எனக்கு வேண்டாம். அந்த முடிவோடு தான் நான் வந்திருக்கிறேன்.''

''வெறுங் கழுத்தோட உன்னை ஏத்துக்க நான் ஏமாளியா? எனக்குப் பதினையாயிரம் கொடுத்துப் பெண் தர இந்த ஊரில் எத் தனையோ பேர் வராங்க. அதெல்லாம் விட்டு விட்டு ரெண்டாங் கல்யாணம் முடிச்ச உன்னை நான் விரும்பறேன்னு எதுக்கு? உன் கிட்ட இருக்கிற நகை எழுபது எண்பதுக்கு மேல் தேறும். நகையோடு வந்தா வா. இல்லேன்னு நான் போறேன்.''

அவன் போய்விட்டான்.

''கோவில் பிராகாரத்தில் இவளைக் காட்டி என்னை நடுத் தெருவில் விட்டுட்டியே தாயே!'' என்று அழ ஆரம்பித்தாள். இனி எந்த முகத்தோடு வீட்டுக்குப் போவது?

தந்தை கல்யாணம் செய்து வைத்த அன்றிலிருந்தே நகைகள் அவள் அனுபவத் திற்கு வந்து விட்டன. அப்படி இருந்தும் நகைகள் வேண்டாமென்று உதறிவிட்டு வரும் உணர்வு... இந்த உள்ளுணர்வு எப்படி ஏற்பட்டது?

''நீலா சம்மதப்பட்டா உடுத்தின வஸ் திரத்தோட வரட்டும். வச்சுக் காப்பாத் தறேன்.' அன்று கந்தசாமி அப்பாவிடம் தலைநிமிர்ந்து கூறிய வார்த்தைகள்... அந்த வார்த்தைதான் ஒரு உள்ளுணர்வாய் அவ ளிடத்தில் பதிந்திருக்கிறது.

அவளறியாது ஒரு நம்பிக்கை மேலோங் கியது. கந்தசாமி கட்டிய தாலியை எடுத் துக் கண்களில் ஒற்றிக் கொண்டாள்.

'தாயே! நம்பியை இனம் புரிய வச்சுட்டே. அப்படின்னு என் கணவர் உன் சன்னதியில் தாலி கட்டிய கந்தசாமிதான். என்னை அவ ரோடு சேர்த்து வை தாயே!''

அவள் நம்பிக்கையோடு பஸ் ஏறினாள்.

# நினைவெல்லாம் நித்யா 2

கதை: அபர்ணா நாயுடு சித்திரம்:
















ஐயோ! நான் பயந்தது நடந்துருச்சா? என் நெஞ்சிலே நிறைஞ்சிருந்த நித்யா வெறும் நினைவாப் போயிட்டாளா?


கொஞ்சம் கொஞ்சமா நீ விலகிப் போக ஆரம்பிச்சப்பவே நான் விழிச்சுக்காமப் போயிட்டேனே நித்யா! காரணத்தை அப்பவே கண்டறிஞ்சிருந்தா, இப்ப இந்த முடிவு ஏற்படாமத் தடுத்திருப்பேனே!


ம்... காலம் கடந்த யோசனை. இனிமே எனக்கு ஒரே ஒரு லட்சியம் தான். நான் எடுக்கப் போற எல்லா நடவடிக்கைகளுமே அதை அடையத் தான். இதிலே போலீசுக்கு இடமில்லை. அவங்களுக்கு இதிலே வேலையே இல்லை. காரணம்.... .


நித்யா! உன்னை இந்தக் கதிக்கு ஆளாக்கினவங்களைக் கண்டு பிடிச்சு நானே பழி வாங்கப் போறேன்...


அப்போது —
நித்யாவைக் கொலை செஞ்சது இவன் தானா? என்னையும் முடிச்சுடப் பார்க்கிறானா?
தொடரும்

# அதிசயமான ஒரு கிராமம்!

**கா**சாங்காடு. பட்டுக்கோட்டையிலிருந்து மன்னார்குடி செல்லும் பாதையில் 10வது கிலோ மீட்டரில் உள்ள ரகுநாதபுரம் என்ற ஊரில் இருந்து ஒரு கிலோ மீட்டர் உள்ளே தள்ளி இருக்கிறது இந்தக் கிராமம். கிட்டத் தட்ட 5000 பேர் உள்ள இந்தக் கிராமத்தில் எழுபத்தைந்து சதவீதம் வெள்ளாள பிரிவைச் சேர்ந்தவர்கள்.

இங்கு உள்ள எந்தக் கடைகளிலும் சிகரெட்டோ பீடியோ கிடைக்காது. கடந்த 30 வருடங்களாகவே இந்தக் கிராமத்தில் உள்ள எந்தக் கடைகளிலும் சிகரெட், பீடி விற்பதில்லை. மீறி விற்றால் ஊர் பகிஷ்காரத்துக்கு உள்ளாவார்கள். இந்தக் கட்டுப்பாடு எப்படி ஏற்பட்டது?

கிராமத்தில் எல்லோராலும் மதிக்கப் படுபவரும், 22 வருடங்கள் பஞ்சாயத்து போர்டுத் தலைவராக இருந்தவருமான விஸ்வநாதன் அவர்களைச் சந்திக்கிறோம்.

''இந்தக் கட்டுப்பாடு கொண்டு வந்ததற்குக் காரணம், இளம் சிறுவர்கள் கெட்டுப் போகக் கூடாது என்பதுதான். கிட்டத் தட்ட எல்லாக் கிராமங்களிலும் சிறுவர்கள் பீடி குடிக்கும் பழக்கத்தை வைத்துக்கொண்டு இருக்கிறார்கள். அந்தக் காலத்தில் பள்ளிக் கூடம் செல்வதென்றால் இங்கிருந்து 10 கிலோமீட்டர் தள்ளியுள்ள பட்டுக் கோட்டைக்குத்தான் செல்ல வேண்டும். பள்ளி செல்லும் சிறுவர்கள் கையில் பீடியுடன் செல்வதைப் பார்த்த பெரியவர்கள் இந்தக் கெட்ட பழக்கத்துக்கு ஒரு தடை போட வேண்டும் என்று தீர்மானித்துச் செயல்பட்டார்கள். இதன் பிறகும் அணையாத பீடியை வைக்கோல் போரின் மேல் வீசியதால் ஒரு முறை 20000 மதிப்புள்ள வைக்கோல் நாசமாயிற்று. சிறு வயதில் இரண்டு சிறுவர்கள் காச நோயால் இறந்து போனார்கள். இந்த நிகழ்ச்சிகள் எல்லாம் எங்கள் மனத்தில் ஒரு கோபத்தைக் கிளப்பி விட்டன. வெளியூர்களுக்குச் சென்று படித்துக் கொண்டிருந்த பையன்களுக்கு டவுனில் பீடி, சிகரெட் பிடிக்க வாய்ப்பிருந்ததால் 1960ல் நாங்கள் எங்கள் கிராமத்திலேயே பள்ளிக்கூடம் திறந்தோம். அதற்கப்புறம் சிறுவர்கள் யாரும் சிகரெட், பீடி என்ற பழக்கத்துக்கு அடிமையாக விடவில்லை நாங்கள்.''

''சிகரெட் பிடிப்பதைத் தடுப்பது என்பது தனி மனித சுதந்திரத்தைத் தடைப்படுத்துவது போல் இருக்கிறதே?''

''சிகரெட், பீடி பிடிப்பது உடல் நலத்துக்கு ஆபத்தானது என்பது தெரிந்த விஷயம். தற்கொலை செய்து கொள்வது தனி மனிதன் சுதந்திரமாகுமா? மேலும் நாங்கள் பெரியவர்களைக் கட்டுப் படுத்துவதில்லை. அவர்கள் வெளிக் கிராமங்களில் கிடைக்கும் சிகரெட் பீடிகளை வாங்கிக் கொண்டு இங்கே வந்து புகைக்கிறார்கள். அதை நாங்கள் தடுப்பதில்லை. ஆனால் சிறுவர்கள் அவ்வளவாகப் பக்கத்துக் கிராமங்களுக்குச் செல்ல மாட்டார்கள். சென்று சிகரெட் கேட்டாலும் காசாங்காடு சிறுவர்களுக்கு அவர்கள் சிகரெட், பீடி விற்பதில்லை. இளைஞர்கள் இப்படிப் பழகிவிட்டால் வயதான பிறகு இந்தப் பழக்கத்துக்கு அடிமையாவது அதிகமாயிராது. எங்கள் கிராமத்திலிருந்து கிட்டத் தட்ட 400 இளைஞர்கள் சிங்கப்பூரில் வேலை செய்கிறார்கள். அவர்களில் பெரும்பாலோருக்கு இன்றும் சிகரெட் பழக்கம் கிடையாது. சிங்கப்பூரிலேயே இந்த நிலையை ஏற்படுத்தியது எங்களது பெரிய வெற்றி.''



✖ ஊர்ப் பெரியவர் ஆர். விசுவநாதன்

''புகையிலையை அப்படியே உபயோகப் படுத்துவது, சிகரெட், பீடியை விடக் கெடுதலானது. அதை மட்டும் தடை செய்ய வில்லையே?''

இதற்குப் பதில் சொல்கிறார் திரு தங்க வேல்:

''வெற்றிலை பாக்குடன் சேர்த்துப் போட்டால், புகையிலையின் தீமை குறைந்துவிடுகிறது. மேலும் புகையிலையைப் பெரியவர்கள் தான் உபயோகிக்கிறார்கள். சிறுவர்கள் உபயோகித்தால் தெரிந்துவிடும். ஆனால் இந்தப் பீடி சிகரெட் விஷயம் அப்படியில்லை. நமக்குத் தெரியாமல் சிறுவர்கள் பிடித்துவிட்டு வர வாய்ப்பு உண்டு.''

''இந்தக் கட்டுப்பாட்டினால் ஏதாவது தகராறு வந்திருக்கிறதா?''

''பல வருஷங்களுக்கு முன் மாரியம்மன் கோயில் திருவிழாவில் வெளியாட்கள் வந்து கடை போட்டார்கள். அப்போது மற்ற பொருட்களுடன் சிகரெட், பீடியையும் சேர்த்து விற்க ஆரம்பித்தார்கள். இதைக் கண்டு உள்ளூர் வியாபாரிகளும் சிகரெட்,

பீடியை விற்க ஆரம்பித்தார்கள். கடைசியில் விஷயம் ஊர்ப் பெரியவர்களுக்குத் தெரிந்து வெளியாட்களை அப்புறப் படுத்தினார்கள். எங்கள் கிராமத்து வியாபாரிகளைக் கடுமையாக எச்சரித்தார்கள். அப்போது சிறு கலாட்டா நடந்தது. அதைத் தவிர வேறு எதுவும் நடந்ததில்லை'' என்றார் ஷேக் தாவூத் என்ற இளைஞர்.

ஊரைச் சுற்றிப் பார்க்கக் கிளம்புகிறோம். போகும்போதே அந்த ஊரைச் சேர்ந்த அ. தி. மு. க. பிரமுகர் வைத்தியநாதனைச் சந்திக்கிறோம்.

''இந்த ஊரில் எந்தக் கட்சிக் கொடிகளுமே பறக்காது. ஏதாவது ஒரு கட்சியின் பொதுக்கூட்டம் என்றால் அன்று ஒரு நாள் மட்டும் கொடியை ஏற்றி வைத்துவிட்டு மறு நாள் கொடிக் கம்பத்தை அந்தக் கட்சிப் பிரமுகர் வீட்டில் வைத்து விடுவோம்.'' என்கிறார் வைத்தியநாதன். ரொம்ப ஆச்சரியமான விஷயம்தான். எந்த இடத்திலும் கட்சிக் கொடிகள் கண்ணில் படவில்லை. கிராமத்தில் 15 கடைகள் இருக்கின்றன. ''பீடி, சிகரெட் ஏதாவது இருக்கிறதா?''

வதற்காக யாரும் விடவில்லை. 100 ஹரிஜனக் குடும்பங்கள் அந்த ஊரில் வசித்தாலும் ஜாதி ஹிந்துக்களுக்கும் அவர்களுக்கும் இது வரை ஒரு தகராறும்ஏற்பட்டது இல்லையாம். சினிமாக் கொட்டகை கிடையாது.

1958ம் ஆண்டு விஸ்வநாதன் பஞ்சாயத்துத் தலைவராக வந்தபோது பஞ்சாயத்துக் கூட்டம் கோவிலில்தான் நடக்குமாம். ஹரிஜன உறுப்பினர்களும் கலந்து கொள்வார்களாம்.





என்று கேட்டுப் பார்த்தோம். ''இல்லை'' என்ற பதில்தான் வந்தது.

அந்த ஊரில் பரம்பரை பரம்பரையாகக் கடை வைத்திருக்கும் திரு செல்வராஜ் அவர்களைச் சந்திக்கிறோம்.

''நீங்கள் ஒரு வியாபாரி. எதை வேண்டுமானாலும் விற்க உங்களுக்கு உரிமை இருக்கிறது. நீங்கள் ஏன் பீடி, சிகரெட் விற்பதில்லை?''

''சிகரெட், பீடி இளைஞர்களைக் கெடுக்கிறது என்பது ஒரு காரணம். மேலும் நாங்கள் விற்றால் ஊரே எங்களைப் பகிஷ்காரம் செய்து விடும். இன்னொரு காரணம், சிகரெட், பீடியில் அப்படி யொன்றும் பெரிதாக லாபம் வந்துவிடுவதில்லை. இதில் ரொம்ப முக்கியமானது ஊர்க் கட்டுப்பாடுதான்'' என்கிறார் செல்வராஜ்.

மீண்டும் விஸ்வநாதன் அவர்களைச் சந்திக்கிறோம். அவர் இன்னும் சில ஆச்சரியமான விஷயங்களைக் கூறுகிறார்.

கிராமத்தில் கள், சாராயக் கடைகள் கிடையாது. தென்னை மரங்களைக்கள் இறக்கு

✖ 1979ம் ஆண்டு இந்தக் கோவில் திருவிழாவின் போதுதான் தகராறு நடந்தது.

✖ ஷேக்தாவூத்

✖ தங்கவேல்

✖ கடைக்காரர் செல்வராஜ்

✖ வைத்தியநாதன் அ.தி.மு.க. பிரமுகர்

ஆச்சரியமான அந்தக் கிராமத்தை விட்டு வரும்போது, இதே மாதிரி மற்ற கிராமங்களும் இருந்தால் ஆட்சியிலும் ஒழுக்கம் ஏற்பட்டு, நாடு உயர்ந்து நிற்குமே என்ற எண்ணம் ஏக்கப் பெருமூச்சாக விடைபெற்றது!

—ப்ரியன், படங்கள்: சுபா

# கிளி

## சென்றவாரம்

"கற்பு எனப்படுவது யாதெனில் சந்தர்ப்பம் இல்லாமை" என்ற ஓர் மேனாட்டு எண்ணத்தை அப்படியே நம்புகிறவன் ரகு. ஓர் அலுவலகத்தில் வேலை பார்க்கும் சுலோசனா அவனை இதய பூர்வமாய்க் காதலிக்கிறாள். ஆனால் அவளைக் கெடுப்பதென்று தீர்மானித்து விடுகிறான் ரகு. 'இந்த உலகத்திலேயே இல்லாத பொருள்' என்று அர்த்தம் தொனிக்க 'நேமி' என்று அவளுக்குச் செல்லப் பெயரிட்டு அழைக்கும் ரகு, அவளிடம் பட்டும் படாமலும் நடந்து கொண்டு, சாமர்த்தியமாகப் பேசி, அவளே வலையில் வலிய வந்து சிக்குமாறு செய்துவிடுகிறான்!

## 2

### ரொம்ப சௌகரியமான தளத்தில் உட்கார்ந்து கொண்டு...

ஓர் ஆறு மாதம்.

ஒருநாள் காலை சுலோசனா அலுவலகத்தில் இருந்தாள். நேரம் பதினொன்று இருக்கும். மனம் வேலையில் பாதியாகவும் நேற்றைய ரகுவின் உறவில் பாதியாகவும் இருந்தது. பியூன் சண்முகம் போகிற போக்கில் 'அம்மா யாரோ செல்லையாவாம். ஒங்களைப் பார்க்கணுமாம்.' என்று சொல்லிக் கொண்டே நகர ஆரம்பித்தான்.

"யாரு? செல்லையாவா? என்னையவா?"

"ஆமாம்மா. ஒங்க பேருதான் சொன்னாரு. கொஞ்சம் வயசாளி."

அவள் அனுமானித்துப் பார்த்தாள். 'வயதானவர்' 'செல்லையா' — ஒருவேளை கல்யாணத் தரகராக இருக்குமோ? இருக்கலாம். தற்போது இவளது அக்காள் திருமணத்துக்கு ஏற்பாடு செய்து கொண்டிருப்பவர். அக்காளின் திருமணப் பேச்சு இவரது முயற்சியால்தான் முக்கால்வாசியாக வளர்ந்திருந்தது. ஆனால் இந்த விஷயத்தில் இது வரை தன்னை ஒரு பெரிய தலையாக எடுத்துக் கொள்ளாத இவர் இப்போது அலுவலகத்துக்கே வந்திருக்கிறார் என்றால்..?

அவள் வராந்தாவுக்கு வந்தபோது அவள் அனுமானித்தபடியே தரகர் செல்லையாதான் நின்று கொண்டிருந்தார். ஆனால் எதிர்பாராத விஷயமாக வழக்கத்துக்கு மாறாகச் செல்லையாவின் முகம் செழிப்பில்லாமல் இருந்தது. செல்லையா எப்போதுமே கலகலப்பான மனிதர் ஆயிற்றே!

'வாங்க' 'வாம்மா' இரண்டையும் அவர்கள் ஒரே நேரத்தில் சொல்லிக் கொண்டார்கள்.

"என்னங்க சார் விசேஷம்?"

"ம்....?" என்று நீட்டிய அவர், "அப்படிக் கொஞ்சம் தனியாப் போயிப் பேசுவோம்" என்றார்.

அவர்கள் அந்த வராந்தாவின் கோடிக்கு வந்தார்கள். பக்கத்தில் யாருமில்லை. கொஞ்சம் மெதுவாகப் பேசினால் யார் காதிலும் விழப்போவதில்லை. ஆனாலும் செல்லையா தயங்கினார்.

சுலோசனா நாமே ஆரம்பிப்போமென்று "ஏதும் அக்கா விஷயத்தில் சிக்கலா?" என்று கேட்டாள்.

"ஆமா"

"என்ன சிக்கல்? வீட்ல சொன்னீங்களா?"

"வீட்ல சொல்ல முடியாமதான் ஒங்கிட்டே வந்தேன்" என்றவர், மீண்டும் தயங்கினார். ஆனால் இவள் அடுத்து, "சும்மா சொல்லுங்க சார்"—என்று சொன்னதும் அவர் விஷயத்தைப் பட்டென்று உடைத்தார்!

"நீ யாரோ ஒரு தாடிக்காரன் கூடச் சுத்திக்கிட்டு இருக்கியாம். அது லாட்ஜில ரூம் எடுக்கிற அளவுக்குப் போயிருக்காம். அப்படிப் பட்ட வீட்டில சம்பந்தம் வேண்டாம்னு அவங்க சொல்றாங்க."

சுலோசனா தனது மன ஆட்டத்தை ஒரு நிமிஷம் உடலைப் பேசாமல் வைத்திருப்பதன் மூலம் சமாளித்தாள்.

"என்னம்மா சொல்றே?"

"எதை வச்சு இப்படிச் சொல்றாங்க?"

"எதையாவது வச்சுச் சொல்லிட்டுப் போறாங்க. இப்ப அது நெஜமா பொய்யாங்கறதுதான் பிரச்னை."

அவள் அரை மனசாக "இது பொய் சார்" என்றாள்.

"இல்லேம்மா, நெஜம்."

அவள் நிமிர்ந்து பார்த்து ஓர் அரைப் பொய்க் கோபமாக, "எப்படிச் சொல்றீங்க?" என்று கேட்டாள்.

"என்னம்மா இது? என் வயசுக்கு இது கூடத் தெரியாதா? ஒரு கன்னிப் பெண்ணைப் பார்த்து, நீ யார் கூடவோ சுத்திரியாம், லாட்ஜுக்கெல்லாம் போறியாம்னு சொல்றேன்; இது பொய்யா இருந்தா இக்



நேரம் அவ தெறிக்கப் போயிருக்க மாட்டாளா? எவன் சொன்னவன்? கொண்டாங்க, செருப்பாலே அடிப்பேன்னு கத்தியிருக்க மாட்டாளா? இப்படியா, 'இல்லே, பொய் சார்'னு அழுது வடிவா?''

கிழம் ஒரு சண்டையில் வெற்றி கண்டு நின்றது.

கலோசனு பேசாமல் குரோட்டன்ஸ் செடிகளையே பார்த்துக் கொண்டு நின்றாள்.

''அப்புறம்மா?''

ஒரு பெருமூச்சோடு, அவள், ''அப்புறம் நீங்கதான் சொல்லணும்'' என்றாள்.

''நான் இந்த அலையன்ஸை நிறுத்திட றேன்.''

''இது எங்க வீட்டுக்குத் தெரியுமா ஸார்?''

''தெரியல. ஆனா தெரியாமலேயே போயிடவும் சான்ஸ் இல்லியே.''

......

''சரி, நான் வரேம்மா. நான் இந்தச் சேதி பொய்யா இருந்துடக் கூடாதாங்கற ஆதங்கத்தோடதான் வந்தேன். ஆனா இது இப்படியாயிடுச்சு. பரவாயில்லே. இந்தக் கல்யாண விஷயம் இருந்துட்டுப் போகட்டும். பொதுவாவே, நீ அவன் தொடர்பை மறு சிந்தனை பண்ணிப் பாரும்மா. நான் வரட்டுமா?''

அவள் ரோஷமாக ''நான் அவரைக் காதலிக்கிறேன். கல்யாணம் செய்துக்கப் போறோம்'' என்றாள்.

''காதல் பெரிசுதாம்மா. எனக்குக் கூடத் தெரியும். ஆனா சில சமயம் அதுக்குக் கொடுக்க வேண்டிய விலைதான் ரொம்பஅதிகமா இருக்கும். எல்லாத்தையும் கன்சிடர் பண்ணிக்க.''

கலோசனு தன் இருக்கைக்குத் திரும்பிக் கொண்டிருந்தபோது அவளது அண்ணன் முகம் கண்ணில் வந்தது. இது அவனுக்குத் தெரியாமல் இருக்கப் போவதில்லை. தெரிந்ததும்...அப்புறம் அந்த முகத்தைக் கற்பனை செய்யும் தைரியம் அவளுக்கு வரவில்லே. கூடவே ஆச்சரியமாகவும் இருந்தது. இந்த விஷயம் இந்தச் சந்தர்ப்பத்தில் இல்லாவிட்டாலும் தாங்கள் சொல்ல விரும்புகிற நேரத்திலாவது அவனுக்குத் தெரிந்துதானே ஆகவேண்டும். அப்போது மட்டும் அவன் ஆரத்தித் தட்டைத் தேடுவான் என்பது என்ன நிச்சயம்? அவன் கோபத்தை எதிர்ப்பட்டுத்தானே ஆக வேண்டும். அப்படியிருக்க இப்போது என்றுமே நடக்காத ஒன்று நேர்ந்து விட்டது போல் தன் நிலை சற்று வானேன்?

இப்போது என்ன செய்யலாம்? உடன் ரகுவைப் பார்க்க வேண்டும். ரகு இன்று முழுதும் தனக்கு எந்த எங்கேஜ்மெண்டும் இல்லை யென்றுதானே சொன்னார். ஆமாம். இப்பொழுது மணி என்ன: பதினொன்று இருபது. போனால் இருப்பார். அவள் லீவு லெட்டர் எழுதினாள்.

அவள் பஸ்ஸிற்குக் காத்து, பிடித்து ரகுவின் அறைக்குப் போனபோது மணி ஒன்றாகி இருந்தது.

கான்வாசில் ஏதோ எழுதிக் கொண்டிருந்த ரகு காலடி அரவம் கேட்டுத் திரும்பிப் பார்த்து ''ஹல்லோ... நேமி... என்ன அசாதாரணம் நடந்து போச்சு?'' என்று கேட்டான்.

கலோசனு வந்துநாற்காலியில் உட்கார்ந்தபடியே, ''அசாதாரணம் நடந்தது எப்படித் தெரியும்?'' என்றாள்.

''தெரியாதா? ஒரு மணிக்கு வந்திருக்கே. முகத்திலே பயந்த தடம் அப்படியே இருக்கு.''

''நம்ம காதல் அதோட சோதனைக் கட்டத்துக்கு வந்தாச்சு ரகு.''



''வெல்கம்'' என்றான் வர்ணம் செய்த படியே.

''நம்ம காதல் மாப்பிள்ளை வீட்டுக்காரங் களுக்குத் தெரிஞ்சுட்டதுனால என் அக்கா கல்யாணம் நின்னு போச்சு.''

''வாட்?'' — ரகு உட்கார்ந்தபடியே திரும் பிப் பார்த்தான்.

''ஆமா ரகு.''

''இது என்ன அர்த்தமில்லாம இருக்கு? அவன் எழுந்துகொண்டான். ''நாம காத லிச்சா என்ன, கத்திரிக்கா செஞ்சா என்ன? இதுக்கும் உன் அக்காளுக்கும் என்ன சம் பந்தம் இருக்கு? அவளை ஏன் வேணாங்கணும்?''

''அது அப்பிடித்தான் ரகு. இங்க அப் பிடித்தான் ரகு. தாயைத் தண்ணித் துறை யில பார்த்தா மகளை வீட்ல பாக்க வேணாம்னு வந்த பாரம்பரியம் இல்லியா நம்ம பாரம் பரியம். இப்ப, தங்கச்சிய ஆபீஸ்ல பார்த்தா அக்காவ அடுப்படியில பாக்க வேணாம்னு அது பரிணமப்பட்டிருக்கு.''

''சரி, இதுக்கு என்ன ரெமடி?''

''அதுக்குத்தான் விழுந்தடிச்சு ஓடிவந் தேன். அத நீங்கதான் செய்யணும் ரகு. இன்னிக்கு நான் போறதுக்குள்ள நீங்க என் வீட்டுக்குப் போகணும். யாராச்சும் பெரிய வங்க, இல்லேன்னா பிரண்ட்ஸ் ரெண்டு பேரைக் கூட்டிக்கிட்டுப் போங்க. போயி இந்த மாதிரி நாங்க காதலிக்கிறோம். முறையாப் பெண் கேட்க வந்திருக்கோம்னு சொல்லுங்க. அதிர்ஷ்ட வசமா ரெண்டு பேரும் ஒரே ஜாதியா இருக்கிறதினாலேயும் உங்களுக்கும் போதுமான பொருள் வசதி இருக்கிறது னாலயும் பெரிசா ஒண்ணும் சிக்கல் இருக் காது.''

பின் சிறிது இடைவெளிவிட்டு, நினைத்துப் பார்த்துச் சொன்னாள்: ''சொல்லும்போது வெறுமனே நாங்க பார்த்துக்கிட்டது மட்டும் உண்டுன்னு சொல்லுங்க. ரொம்பச் சொல் விட வேண்டாம். ரெண்டு கல்யாணத்தையும் ஒரே மேடையில வைக்கிறதுனாலதான் இந்தச் சிக்கல் தீரும்.''

ரகு உடனே பதில் சொல்லவில்லை. சிக ரெட்டைப் பற்றவைத்து இரண்டு முறை ஊதினான். பின் ஜன்னலுக்குப் போய் வெளியே நீளப் பார்த்தான்.

'நேரம் வந்து விட்டது. இப்போதுதான் தன் சுயநலத்தை வெளிக் கொட்டியாக வேண்டும். தாங்குவாளா இவள்? ம்... தாங் காமல் என்ன செய்வாள்? முதலில் துடிக் கலாம், குதிக்கலாம், ஆய் ஊய் என்று கத்த லாம். ஆனால் எல்லாம் சரியாகிவிடும். இவள் தொடர்ந்து வாழ வேண்டியிருக்கிறதே! வாழ்க்கைக்கு மிஞ்சி என்ன இருக்கிறது? வாழ்க்கை பற்றிய உணர்வு இவளைக் காப் பாற்றும்.'

''என்ன பேசாம வெளியவே பாத்துக் கிட்டு இருக்கீங்க ரகு?''

''........''

''ரகு?''

ரகு திரும்பாமலே சொன்னான், ''சாரி நேமி. அது என்னால முடியாது. கூடாது.''

''ஏன்?''

''ஒருவேளை அவங்க கல்யாணத்துக்குச் சம்மதிச்சிடலாம் இல்லையா?''

அவள் திகைப்போடு அவனைப் பார்த்தாள்.

''எனக்குக் கல்யாணம்கற தத்துவத்திலே நம்பிக்கை கிடையாது.''

இவன் என்ன பேசுகிறான்? அல்லது நாம் தான் கனவேதும் காண்கிறோமா என்று வந்தது அவளுக்கு.

''என்ன சொல்றீங்க ரகு?''

''ஆமா நேமி. இந்தக் கல்யாண பந்தங் கிற விலங்கை சராசரிகளும் முட்டாள்களும் தான் தாங்க முடியும். நான் சராசரியும் இல்லே, முட்டாளும் இல்லியே.''

அவள் கோபமாகக் கேட்டாள், ''நீங்க நெஜத்துக்குத்தான் பேசறீங்களா இல்லே, வேடிக்கை செய்யறீங்களா? வேடிக்கை பேச இது நேரமில்லே ரகு.''

''சாரி நேமி, நான் சீரியஸாத்தான் பேசறேன்.''

அவள் அநேகமாகக் கத்தினாள். ''நீங்க என்னைக் கல்யாணம் பண்ணிக்கிறதா ஆரம் பத்திலேயே உறுதிமொழி கொடுத்திங்க.''

''.......''

''என்ன சொல்றீங்க?''

''ஆமா.''

''ஆமாம்னா?''

''உறுதிமொழிதான் கொடுத்தேன்.''

''பின்னே?''

''அத அப்போதைய ஒரு நன்மைக்காகக் கொடுத்தேன். ஆனா அதையே ஒரு தீமைக் காகவும் பயன்படுத்தணும்னு என்ன இருக்கு?''

''என்ன நன்மை?''

அவன் மெல்லத் தலையுயர்த்தி 'இதுகூட தெரியாதா உனக்கு' என்கிற பாவனையில் அவளைப் பார்த்துவிட்டுச் சொன்னான், ''இன் பம் நேமி.''

அவளுக்கு அப்படியே அவனை அறைய வேண்டும் போலிருந்தது. ''ஒங்க இன்பத்துக் காக என்னோட வாழ்க்கையையே பலியாக்க

**மானேஜர்: என் செக்ரடரி தான், நான் வெளியே போயி ருப்பதாகச் சொன்னாளே. பிறகு நான் இருப்பது எப்படித் தெரிந்து விட்டது, உனக்கு?...**

**ஸேல்ஸ்மேன்: உங்களுடைய செக்ரடரி அப்படிச் சொல்லி விட்டுச் சீட்டிலே உட்கார்ந்து கொண்டு வேலை செய்தாளே...!**

**-கீதா**



''எனது கூந்தல்
அடர்த்தியாகவும் பட்டுப்
போல் மிருதுவாகவும்
வளரக் காரணம்''




# தேங்காய் எண்ணெய்

உங்கள் தேவைக்கேற்றபடி
பலவித பாக்கிங்குகளில்
கிடைக்கின்றது.

V. V. தனுஷ்கோடி நாடார் & சன்ஸ்
தூத்துக்குடி-628 001

EP-VVD-1005

முடிவு கட்டியிருந்திங்களா? அவ்வளவு வஞ்சகம் மறைஞ்சு இருந்துதா உங்க நெஞ்சிலே? அதுக்காகக் கேவலமான பொய் சொல்லி ஏமாத்துனீங்களா?''

ஆனால் இவளது ஆத்திரத்துக்கு எதிர் மறையான சாந்தத்தில் அவன் பதில் சொன்னான். ''சாரி நேமி. நாமெல்லாம் விவரம் தெரிஞ்சவங்க. இப்படி வார்த்தைகளை வார்த்தைகளாகப் பார்க்கக் கூடாது. வார்த்தைகளுக்குத் தனியா என்ன அர்த்தம் இருக்கு? வார்த்தைகளுக்கு அர்த்தம் அது தர்ற பலனைப் பொறுத்துத்தான் இருக்கு. நான் கல்யாணம் செய்துக்குறேன்னு சொன்னதை பொய், மோசடின்னு சொல்றியே. அது எப்பிடியாகும்? நீயே யோசிச்சுப் பாரு. அதுனால் நீயே சொன்ன மாதிரி, ஒரு ஆறு மாசம் ஒரு சொர்க்க வாழ்க்கையே வாழ்ந்திருக்கோம். ஒரு சொர்க்க வார்த்தை கெட்டதா? இதுல எனக்கு மட்டும் இன்பம் கெடச்சிருந்தா நான் சொன்னது பொய் தான். ஏமாற்றுதான். ஆனால் உனக்கும் என்னளவுக்குச் சந்தோஷம் உண்டாச்சே. உனக்கே தாங்க முடியாத சந்தோஷம் கொடுத்தது எப்பிடிக் கெட்டதாகும்? நீ அனுபவிச்ச இன்பங்களை மறுபடியும் ஒரு தரம் நினைச்சுப் பாரு, டார்லிங்.''

சுலோசனாவுக்குத் தலை கிறுகிறுத்துக் கொண்டு வந்தது. இந்த வஞ்சகன் இப்படியொரு தினத்தை எதிர்பார்த்தே, தனது தர்க்க சாஸ்திர வாளோடு ஏற்கனவே தயாராகி அல்லவா இருந்திருக்கிறான்? இருந்தாலும் அவள் சீக்கிரம் தன்னை ஸ்திரப் படுத்திக் கொண்டு எதிர் வாதம் செய்ய ஆரம்பித்தாள்.

''அப்படியே இருக்கட்டும். ஆனா வார்த்தைகள் கொடுக்கிற பலன் அப்போதைய விஷயமா இருந்தால் போதுமா? நிரந்தரமானதா இருக்க வேண்டாமா? ஒரு ஆறு மாசம் சந்தோஷம் கொடுத்து விட்டு இப்ப என்னோட முழு வாழ்க்கையையே காவு கேக்குதே உங்க பொய் உறுதிமொழி. என்னோடது மட்டுமில்ல. என் அக்கா தங்கைகள் வாழ்க்கையைக் கூட...'' அவள் கண்களில் நீர் கட்டியது.

மனைவி : ''வர வர எனக்குப் புடவைகள், நகைகள் மேல் இருக்கிற ஆசையே போயிடுச்சுங்க''!

''நிஜமாகவா?''

''எத்தனை நாளைக்குத்தான் பழைய புடவைகளையும், நகைகளையுமே போட்டுக்கறது?''

- ஏ. கே. சங்கர்



''சேச்சே. என்ன இது கண்ணீர்? பைத்தியக்காரி மாதிரி. சினிமா கதாநாயகி மாதிரி.''

''நானில்ல நெருப்பு மேலே நிக்கிறேன்.''

''இல்லே டார்லிங். இது பொய்த் தோற்றம். நீ போயி, வீட்ல, யாரு சொன்னான், எவன் சொன்னான், கொண்டா ஜோட்டால அடிக்கிறேன்னு தலையை விரிச்சுப் போட்டுக்கிட்டு ஒரு ஆட்டம் ஆடு. நெருப்பெல்லாம் இருந்த எடம் தெரியாமப் பறந்து போயிடும்!''

அவளுக்குப் பழையபடி கோபம் வந்தது. ''நெருப்பை அணைச்சுட்டு, அப்புறம் அவங்க பயந்து போயி அவசர அவசரமா ஏற்பாடு செய்யிற எவனையாவது கட்டிக்கிட்டு வாழவாக்கும்?''

''அது உன் இஷ்டம்.''

அவள் சட்டென்று மீண்டும் தணிந்தாள். ''வேண்டாம் ரகு. நான் உங்களைப் போல நெனைக்கல. நான் உங்களை மனசாரக் காதலிச்சேன். நீங்கதான் எல்லாம்னு நெனச்சேன். உங்களைத் தவிர வேறொரு ஆணோட வாழ முடியாது ரகு. அந்த உறுத்தலோட என்னால வாழவே முடியாது ரகு.''

''இது ஏன் உன்னை உறுத்தணும்? What was there? நாம ரெண்டு பேரும் ஒரு மட்ல நின்னு டென்னிஸ் விளையாடியிருந்தா அது உறுத்துமா? அது போலத்தான் செக்ஸும். yes! It's also a pleasure game!''

''நான் அப்படியெல்லாம் நெனச்சுக்குற மாதிரி வளரலியே ரகு.''

''நீ வளர்ந்த விதத்துக்காக நான் சிலுவை தூக்க முடியுமா?'' — அவன் போய்த் தன் படுக்கையில் உட்கார்ந்து சம்மணமிட்டுக் கொண்டான்.

அவளுக்கு அடுத்து என்ன செய்வதென்று தெரியவில்லை. தானொரு ஆணாயிருக்கிற ரொம்ப சௌகரியமான ஒரு தளத்தில் உட்கார்ந்து கொண்டு இவன் தத்துவம் பேசுகிறான். பெண்ணாயிருக்கிற தனக்குத்தான் புத்தி இல்லாமல் போய் விட்டது.

ஆனாலும் விட்டுவிட முடியுமா? என்ன செய்யலாம்? மிரட்டிப் பார்க்கலாமா?

''நான் இதோட ஒண்ணும் செய்யாமப் போயிடுவேன்னு நினைக்காதீங்க. என் அண்ணன் ஒரு போலீஸ் ஆபீஸருங்கறதை நெனைப்புல வையுங்க.''

அவன் இப்போதுதான் கொஞ்சம் கோபம் கொண்டவனாக, ''சொல்லு போ'' என்றான்.

இந்த ஆயுதமும் பொடித்துப் போகவே வந்த அழுகையை அவளால் அடக்க முடியவில்லை. பொங்கி அழுதாள். கூடவே, இந்த அழுகை இவனை இரக்கப்படுத்தலாம் என்றும் நினைத்தாள்.

ஆனால் இந்த அழுகை ரகுவுக்கோ பெரிய ஆறுதல் சந்தோஷத்தைத் தந்தது. 'ஆகா, பெண்ணாகிய இவள் அழுதுவிட்டாள். இனி இவளது இறுக்கம் தளர்ந்துவிடும். நடக்கக் கூடியதை நினைக்க ஆரம்பித்து விடுவாள்.'

அது அப்படித்தான் நடந்தது. அழுது முடித்துக் கண்களைத் துடைத்துக் கொண்ட சுலோசனா விருட்டென எழுந்து வெளி நடந்தாள்.

(தொடரும்)

# ஆரோக்கியம், ஆனந்தம், ஒன்றுக்கொன்று ஆதாரம்!

## போர்ன்விடா பருகுங்கள்.

உங்கள் குடும்பத்தினருக்கு இன்சுவைமிக்க போர்ன்விடா வழங்குங்கள். போர்ன்விடாவில் கோகோ, மால்ட், பால் மற்றும் சர்க்கரையின் நற்பண்புகள் நிறைந்துள்ளன. நூறு ஆண்டுகளுக்கும் மேலாக உணவுப்பான நிபுணர்கள்-காட்பரி தயாரித்து அளிப்பது.




மிச்சப்படுத்துங்கள் பணத்தை...
உங்கள் விருப்பமான

காட்பரிஸ் **போர்ன்விடா**

உங்களோடு வளரும் நன்மை

# அழியாச் செல்வம்



✖ எஸ். வி. வேங்கடராமன்

தமிழ், தெலுங்கு, கன்னடம், மலையாளம், ஹிந்தி என்று நூற்றைம்பது படங்களுக்கு இசையமைப்பாளராகப் பணியாற்றியவர் திரு எஸ். வி. வேங்கடராமன். 47 வருஷகாலமாகத் திரைப்பட இசையமைப்பாளராகப் பணியாற்றும் திரு எஸ். வி.வி., அது தவிர, வானொலியிலும் டி.வி.யிலும் இசைத் தட்டுக்களுக்காகவும் இசையமைத்து வருகிறார். அந்த நாளைய பக்த மீரா, ஞான சௌந்தரி போன்ற பல வெற்றிப் படங்களுக்கு இசை அமைப்பாளராக இருந்து பெருமை சேர்த்தவர். இவர் இசையமைப்பில் ''காற்றினிலே வரும் கீதம்', 'அருள் தாரும் தேவ மாதாவே'—போன்ற வற்றை இன்றும் கேட்டு ரசித்து மகிழ்கிறோம்.

கேள்வி: திரை இசை அமைப்பில் அந்த நாட்களுக்கும் இப்போதுள்ள நிலைக்கும் இசையில் என்ன மாற்றம் காண்கிறீர்கள்?

எஸ். வி. வி.: அப்போ எல்லாம் 'கிளாஸிகல்' ட்யூன்லே பாட்டுப் போட்டால் ரொம்பவும் ரசித்துக் கேட்பார்கள், பாடுவார்கள். அதே மாதிரி கிளாஸிகல் முறையிலே ட்யூன் போட்டா இப்பக்கூட நம்ம ரசிகர்கள் ஆர்வத்தோட கேட்பார்கள் என்பதுதான் என் அபிப்பிராயம்.

இப்போது வருகிற இசையமைப்பாளர்கள் எல்லாம் கர்நாடக இசையை ஜனரஞ்சகமா ஆக்கி லைட் பண்ணி அதுலே மேற்கத்திய இசையையும் கலந்து விடுகிறார்கள். இதனால் இவர்களுக்கு ஆற்றல் குறைவு என்று நான் சொல்ல மாட்டேன். காலத்துக்கும் தேவைக்கும் ஏற்ப இப்படி இவர்கள் செய்தாலும் அபார திறமைசாலிகள்தாம்.

கேள்வி: உங்களுடைய படங்களில் மேற்கத்திய இசையைப் பயன்படுத்திய சந்தர்ப்பங்கள் பற்றி...

எஸ். வி. வி.: ஞான சௌந்தரி போன்ற படங்களில் அப்போதே வெஸ்டர்ன் மியூஸிக்கைப் பயன்படுத்தினேன். எனக்கு கிளாஸிகல், வெஸ்டர்ன், ஹிந்தி எல்லாமே ஒரு வரப்பிரசாதமாக வந்தது. எதையும் காப்பி பண்ணாம ஒரிஜினலாகவே ட்யூன்போட்டேன்.

கேள்வி: யார் யாருக்கெல்லாம் நீங்கள் இசை அமைத்துத் தந்தீர்கள்?

எஸ். வி. வி: ஸ்ரீமதி எம். எஸ்., டி. ஆர். ராஜகுமாரி, கண்ணாம்பா, காஞ்சனமாலா, புஷ்பவல்லி, பி.யு. சின்னப்பா, ஹொன்னப்பா பாகவதர் போன்ற பல கலைஞர்கள் என்னோட இசையமைப்பிலே பாடினார்கள். ஜுபிடர், ஜெமினி, பிரகதி பிக்சர்ஸ், ராஜராஜேஸ்வரி பிக்சர்ஸ், சந்திர பிரபா சினிடோன், எல்லாத்திலேயும் நான் மியூஸிக் டைரக்ட் பண்ணினேன்.

கேள்வி: அந்த நாள்லே சம்பளம் எல்லாம் எப்படி?

எஸ்.வி.வி.: சில சமயம் மாதச்சம்பளம் 150 ரூபாயிலிருந்து 300 ரூபாய் வரை கிடைக்கும். நான் படத்துக்கு 1500ரூபாயும் வாங்கினேன். அதிகபட்சமா பதினாலாயிரம்ரூபாயும் கிடைத்தது. 1977 வரை நான் சினிமாவிலே பணியாற்றினேன். 1964 வரை நிறைய படங்கள்.

கேள்வி: தங்களுடைய இசையமைப்பில் வந்த முதல் திரைப்படம், அது தொடர்பான மறக்க முடியாத அனுபவம் ஏதாவது உண்டா?

எஸ். வி. வி: அந்த நாளைய பிரகதி பிக்சர்ஸ் என்கிற ஸ்தாபனத்திலே திரு ஏ. வி. எம். மும், திரு கப்பையா செட்டியாரும் நந்தகுமார்னு



ஒரு படம் எடுத்தார்கள். 1937-38லே தயாரான படம். அப்ப எனக்கு இருபத்தேழு வயசு. அதுக்கு மூணு வருஷம் முன்னே இருந்தே சில படங்களுக்கு ஏதாவது பின்னணி இசை அமைச்சிருக்கேன்.

செட்டியார் என்னைப் பெங்களூர்லே சந்திச்சார். நந்தகுமார் படம் எடுக்கறோம். அதிலே ப்ரொடக்ஷன் இன்சார்ஜ் ஆக இருந்துண்டு, உனக்கு அனுபவம் இருக்கிறதாலே கூட இருந்து செய்னு சொன்னார். அந்த நந்தகுமார் படம் தமிழ், மராட்டி, ஹிந்தி மூணு மொழியிலேயும் தனித்தனி ஆர்ட்டிஸ்ட் போட்டு எடுக்கப்பட்டது. அப்போது ஹிந்தி மராட்டிப் படங்களுக்கு மியூசிக் டைரக்டரா இருந்தவர், உங்க தமிழ்ப் படத்துக்குமியூஸிக் டைரக்டர் வேணுமேன்னு கேட்டார்.

அப்போ செட்டியார், இவர்தான் எங்க மியூஸிக் டைரக்டர்னு சொல்லி என்னை அவர்கிட்ட அறிமுகம் பண்ணினார். 'மிஸ்டர் எஸ். வி. நீங்களே மியூஸிக் பண்ணுங்கள்' என்று சொல்லி என்னை அந்தப் படத்திலே முதன் முதலா மியூசிக் டைரக்டரா அவர் ஆக்கிய சம்பவத்தை என்றைக்குமே என்னால மறக்க முடியாது. முதலிலே பயமாகத்தான் இருந்தது. ஆனால் எனக்கு உள்ளே இருந்த ஒரு சக்திதான் அந்தப் படத்துக்கு ட்யூன், மியூசிக் எல்லாம் கம்போஸ் பண்ண வச்சு என்னை ஒரு இசை அமைப்பாளனா உருவாக்கிற்று.

கேள்வி: பாடல்களுக்கு இசையமைக்கிறதில் அந்த நாட்களிலே இருந்த பழக்கம் எப்படி? சிரமங்கள் என்ன?

எஸ். வி. வி.: அந்த நாட்களிலே ஒரு பாட்டை அரை மணியில் கூட கம்போஸ் பண்ணி ரெக்கார்ட் பண்ணியிருக்கோம். குறிப்பாச் சொல்லணும்னா.. டி. ஆர். மகாலிங்கம் நடிச்ச இதய கீதம் படத்திலே வர 'காதலே நம்பாதே'ங்கற பாட்டைச் சொல்லலாம். ஏற்கனவே ஒரு பாட்டை ரெகார்ட் பண்ணி முடிச்சப்புறம் ஒரு மணி நேரம் இடைவெளி கிடைச்சது. அந்த நேரத்திலேதான் கம்பதாசன் எழுதின இந்தப் பாட்டை அரை மணி அவகாசத்துக்குள்ளே மியூசிக் கம்போஸ் பண்ணி ரெகார்டும் பண்ணினோம்.

சில பாடல்கள் ஒரு மாசம் ரெண்டு மாசம் கூட ரிஹர்சல் பண்ணி ரெகார்ட் ஆனது உண்டு.

நடிகர்கள் பாடின காலம், பாட்டு ட்யூன் எல்லாம் பதினைந்து இருபது நாள் கற்றுக் கொள்வார்கள். அப்புறம் வாத்தியக் குழுவோட சேர்ந்து பத்து நாள் ரிஹர்ஸல். அதற்கப்புறம்தான் ரெகார்ட் ஆகும்.

பத்து நிமிஷம் எட்டு நிமிஷம் வர கோரஸ் பாட்டுன்னா ரெகார்ட் பண்ண ஐந்து மணி நேரம் ஆகும். மற்றப் பாட்டுக்களை அரை மணியில் ரெகார்ட் பண்ணுவோம்.

இவ்வளவு சிரமத்தோட ஒவ்வொரு பாட்டையும் தயாரிச்சதாலேதான் இப்பவும் அந்தப் பாடல்கள் காதுலே ரீங்காரம் பண்ணிண்டு இருக்கு. கிராமபோன் கம்பெனி அதையெல்லாம் நாலு அஞ்சு முறைக்கு மேல் மறு பதிப்புப் போட்டு அவையும் விற்பனையாறது.

பேட்டி : ஜெயஸ்பால்
படம்: ஆனந்தன்

## கஜபதி அண்ட் கோ

கமல்










# சரவணா

## மாவரைக்கும் இயந்திரம்

சரவணா கிரைண்டர்கள்

- 4 பேரிங்குகளால் தயார் செய்யப்படுகிறது
- ஒரு வருட உத்திரவாதமுள்ளது
- பெரிய நகரங்களில் எங்களுடைய மாவரைக்கும் இயந்திரங்களுக்கு ஆயுட்கால இலவச சர்வீஸ் செய்து தரப்படுகிறது



தயாரிப்பாளர்கள் :

**சரவணா இன்ஜினீயரிங் டிரேடர்ஸ்**

கோயமுத்தூர் – 641002

ஸ்டாக்கிஸ்ட்ஸ் :

| | |
|---|---|
| NEETHA TRADING AGENCIES, BOMBAY - 14 | Phone: 440490 |
| V. G. PANEERDAS & CO., SION, BOMBAY - 22 | Phone: 474789 |
| TAMILNADU STORES, KAROLBAUGH, NEWDELHI - 5 | Phone: 562320 |
| KARTHIK ENTERPRISES, MADRAS - 28 | Phone: 71624 |

OSR

## சுகேசனில் முதலீடு செய்பவர்களின் எண்ணிக்கை நாளுக்குநாள் அதிகரித்துக் கொண்டிருக்கிறது . . .

## நீங்களும் அவர்களை தொடருங்கள்

எங்கள் பேரில், எங்களிடம் முதலீடு செய்பவர்களின்
அனுபவபூர்வமான நம்பிக்கையின் பிரதிபலிப்பு- நாளுக்கு நாள்
அதிகரித்துக் கொண்டிருக்கும் அவர்கள் எண்ணிக்கை,
நீங்களும் அவர்களை பின்பற்றி பயன் அடையுங்கள்

நாங்கள் டிபாசிட்டுகளையும் ஏற்றுக் கொண்டு பின்கண்ட விகிதத்தில் வட்டி அளிக்கிறோம்.

| | |
|---|---|
| 15% — 18% | மாதந்தோறும், காலாண்டுதோறும், அரையாண்டுதோறும் மற்றும் ஆண்டுதோறும் வட்டி தரப்படும் (ரூ. 3000/க்கு மேற்பட்ட டிபாசிட்டுக்கு மட்டும்) |
| 23.19% (ஏறத்தாழ) | வட்டியும், டிபாசிட்டும் 3 ஆண்டு காலத்திற்கு பிறகு திரும்பப் பெற்றுக் கொள்ளலாம் |
| 66.67% (ஏறத்தாழ) | வட்டி, 3 வருட ரொக்க சர்டிபிகேட்டுகளுக்கு வழங்கப்படும் |

குறைந்தபட்ச முதலீடு ரூ. 1000ம் ரூ. 500ன் கூட்டுத் தொகைகளும்.



**SUGESAN FINANCE INVESTMENT**
(COPYRIGHT REGISTERED)

38, Rajaji Road, Madras-600 001
Phone: 36870, 22495, 22466/67.
Telex: 041/480. Grams: SUGESANS.



BRANCHES: AHMEDABAD, BANGALORE, BOMBAY, CALCUTTA, COCHIN, COIMBATORE, HYDERABAD & RAJKOT.

ADSERVICE-S-1235



# டயலாக்

## கல்யாண வீடு!

அகஸ்தியன்

''**வா**ங்கோ... சீமா... ட்ரெயின் லேட்டா.... ம. யாரு வந்திருக்கா பாரு... டில்லி சீமா ''நம்ப டில்லி சீமா!''

''பாடாவதி ஜி.டி.! ஆறு மணி லேட்... உஸ்...உஸ்... இந்தக் கல்யாண மண்டபம் இருக்கிற இடமே தெரியலே. டாக்சிக்காரன் சுத்திச் சுத்தி வந்தான்.''

''ஏண்டா, துரைசாமி... கொத்தவால் சாவடிக்கு நீதான் நாளைக்குப் போகணும். ஆமா... ரேடியோ ஆயில் இன்னும் இரண்டு டின் வேணும்கிறாரே சமையல்கார சாம்பு!''

''அவருக்கு ரேடியோ ஆயிலும் டி.வி. ஆயிலும் வாங்கிக் கொடுத்துக் கட்டுப்படி ஆகாதுபோலிருக்கு.''

''ஏண்டா முனுசாமி... வாழை மரத்தை இழுத்துப் பிடிச்சுக் கட்டுடா. விழுந்துடப் போகிறது.''

''சார்... கிருஷ்ணமூர்த்தி சார் அனுப்பிச்சார். கார் கேட்டிருந்தீங்களாமே.''

''ஆமாம்... இரண்டு நாளைக்கு நாலு இடம் போக வேண்டியிருக்கும். உங்க பேரு என்ன டிரைவர்?''

''பீட்டர்... காரண்டை இருக்கேன்.''

''யார்டா அது கம்பத்தைப் பிடிச்சு ஆட்டறது.... யார் வீட்டுப் பசங்களோ வானரமா இருக்குதுங்க.''

''அத்தை நவதானியப் பொட்டலம் எல்லாம் எங்கே வச்சே?''

''ஏண்டி கமலா, நேஷனல் கேக்கா ஜானவாசத்துக்குப் போடச் சொல்லப் போறே... சாம்பு கிட்டச் சொல்லு, துண்டைச் சின்னச் சின்னதாகப் போடச் சொல்லு. ஊர்ப்பட்ட பெரிசாப் போடப் போறான். அவனுக்கு என்ன ஆச்சு?''

''செல்லப்பா எந்தக் காமிராவிலே கலர், எதிலே பிளாக் அண்ட் வொயிட்டுன்னு ஞாபகமாப் படம் எடு... கலர் பிலிம் எத்தனை வாங்கினே?''

''கலர் பிலிம் சுபலமாக் கிடைக்கலே. பிளாக்கிலே வாங்கினேன்.''

''என்னடா சீனு... எங்கே 'ஜக்'கோடு காப்பி எடுத்துண்டு போறே?''

''மேலே ஆராவமுது மாமா எல்லாம் சீட்டாடிண்டிருக்கா. அவாதான் கொண்டு வரச் சொன்னா.''

''வெத்திலே பாக்குக்கூட கேட்பாளே மூட்டைக் கணக்கா.''

''ஆமாம் மாமா. மறந்தே போயிட்டேன். பன்னீர்ப் புகையிலே கூட எடுத்துண்டு வரச் சொன்னா.''

''ஜயம்... இப்படி வா... நலங்கு இட்டு ஒரு கை எண்ணெயைத் தலையிலே வெக்கிறேன்.''

''எண்ணெயும்வேண்டாம், வெண்ணெயும் வேண்டாம் பாட்டி. ஐ டோண்ட் லைக் தீஸ் திங்க்ஸ்.''

''சரிதாண்டி. நீ எம்.ஏ. படிச்சிருக்கலாம். சம்பிரதாயம்னு ஒண்ணு இருக்கே. குனிச்சிட்டு நல்லதாப் பட்டுப் புடவையைக் கட்டிண்டு இரு.''

''வாங்கடி வல்லி,வாணி...இப்படித்தான் நிதானமா வரதா...பார் பார்... உன் கல்யாணத்துக்கு நான் எப்போ வர்றேன்னு.''

''சார்....சார்...''

''யார்ப்பா...''

''கைவண்டிக்காரனுங்க. கட்டில், மெத்தைங்க ஏத்தியாந்திருக்கேனுங்க. இறக்கிடட்டுமா?''

''யார்ரு அவன்? இங்கேயா டெலிவரி பண்ணச் சொன்னேன்? நம்ப வீட்டிலே போய் இறக்கு. பாகீரதி தெரு பதினேழாம் நம்பர்.''

''இங்கே சந்தானம் யாரு? டெலிபோன் வந்திருக்கு.''

''சார்... டெலிகிராம்... கலியாணப் பொண்ணு நம்ப குழந்தைங்களா!''

''இல்லேப்பா. நான் பிள்ளை வீட்டுக்காரன்... இனும் அவங்ககிட்டே போய் வாங்கிக்கோ...''

''ரிசப்ஷன்லே யார் கச்சேரின்னு போடலேயே.''

''லால்குடியாம்.... இவாளுக்கு ஃபேமிலி ஃபிரண்டாம். சும்மா ஒரு மணி ஸோலோ. வாம்....''

''என்னடி பத்மா... வா இப்படி. சித்தே... எவ்வளவு செய்யறே? கையிலே என்ன கொடுத்தே?''

''கையிலேன்னு ஒண்ணும் கொடுக்கலே பெரியம்மா. இருந்தாலும் நகை, நட்டு டி.வி. ஸ்கூட்டர்னு அம்பதுக்குப் போயிட்டுது.....''

''அம்பதா... அந்தக் காலத்திலே பூச்சி கோபாலன் அஞ்சு நாள் கலியாணம் பண்ணுன். ஊருக்கே விருந்து பண்ணுன். முப்பதாயிரம் கூட ஆகலே... வெலைவாசி அப்படி ஆயிட்டுது!''

''ராமு நாளைக்கு பாங்லேயிருந்து ஒத்தை ரூபாகாயின் நூறுஇருநூறுவாங்கிண்டுவா..... பூமாலையா... உள்ளே போய் வைப்பா சிங்காரம்.''

''கார்த்தாலே ஏழு மணிக்கு முகூர்த்தம். ஆறு மணிக்கே விரதம் பண்ணிடணும் ராஜகோபாலா.''

''வாத்யார் ஸ்வாமி, இந்த விரதம் கிரதம் எல்லாம் ரொம்பத் தொல்லே. மந்திரத்தைக்கூட ஷார்ட்ஹாண்டிலே சொல்லிச் சட்டுப்புட்னு முடியுங்கோ.....''


டீ... யாரு வந்திருக்கா பாரு... டில்லி சீமா!
பாடாவதி ஜீ.டி. ஆறு மணி லேட்! பாத்ரூம் எங்கேயிருக்கு?
ரேடியோ ஆயில் வேணுமாம்
நல்ல வேளை, பாமாயில் கேக்கலே!


காரு கேட்டீங்களாமே? அய்யங்காரு அனுப்பிச்சாரு...
உன் பேரு?
பங்காரு


பாட்டீ.. நவதானிய பொட்டலம் காணும். நீதான் தேடி எடுத்துத் தரணும்..


மாமி பூச்சி!
அந்த காலத்திலே பூச்சி கோபாலன் அஞ்சு நாள் கல்யாணம் பண்ணினான்...
என்னை கலர் போட்டோ தனியா ஒண்ணு எடுத்துக்கொடுக்கணும்..


நல்ல செருப்பா பார்த்து போட்டுக்கோ!
சார், ஒரு ரூபா நாணயமே கிடைக்கலே.
இந்தக் காலத்திலே யார்கிட்டே நாணயம் இருக்கு!

போட்டிக் கதை-19

# ஒரு தாயின் சாபம்



பானுமதி ராஜகோபாலன்

பகலின் மடியிலிருந்து பால் வெள்ளைக் கோடாக 'சர்...சர்...' என்று ஒரே வேகத்தில் குவளையில் விழுந்து நுரைத்துக் கொண்டிருந்தது. குவளைக்கு மேலாகக் கவிழ்ந்தாற் போல் படர்ந்திருந்த நுரை பட்பட்டெனச் சின்னதாக வெடிக்கத் தாயம்மா இடது கையை ஊன்றிக் கொண்டு எழுந்தாள். வாசற் பக்கம் காலடி ஓசை கேட்டது.

பழக்கப்பட்ட தாயம்மா சலித்துக் கொண்டே உள்ளே வந்தாள். அவள் கணவன் முனுசாமிதான்.

''இன்னாடி? புருசங்காரன் வந்திருக்கிறது கூடக் கண்ணு தெரியலையா? நீபாட்டுக்கு உன் வேலையைப் பார்க்கறியே?'' என்று மிரட்டினான் முனுசாமி.

ஒரு கையில் பால் குவளையும் மறுகையில் லிட்டர் அளவுமாக வியாபாரத்துக்குக் கிளம்பிய தாயம்மா பட்டென நின்றாள்.

''ஆமாய்யா. நீ துபாய்க்குப் போய்க் கை நிறையத் துட்டுச் சேர்த்துக்கினு வந்திருக்கே பாரு. அதான் அப்படியே பூரிக்கப் போய் ஆரத்தி கரைக்க ஓடினேன். வேறே வேலை என்னய்யா எனக்கு? எப்பப் பாரு சாராயம் காய்ச்சறதும் குடிக்கிறதும் சூதாடறதும், செயில்லே போய் ஒரு வருஷம் ஆறு மாசம்னு உக்காந்திட்டு வரதும்... சீச்சீ...என்னமோ ரெண்டு பசு, ரெண்டு எருமை வச்சுப் பாடுபடறேனோ என் பொழைப்பு நடக்குதோ. இல்லாட்டி குளம் குட்டையிலே மிதந்து கிடப்பேனே' என்று படபடவெனப் பொரிந்தாள். அவனுக்கு சாப்பாடு போட்டாள்.

''துன்னுட்டு வாசல்லேயே கெட. எங்கேயாவது சுத்தப் போயிடாதே'' தாயம்மா கிளம்பினாள். அவளை இடித்துக்கொள்வது போல் வேகமாக ஓடிவந்த கபாலி உள்ளே நுழைந்தான்.

அவன் மேலே மோதிய அதிர்ச்சியால் குவளையில் நிரம்பியிருந்த பால் தளும்பிச் சிதறியது.

''சனியன் புடிச்சவன். அப்பனாட்டமே வளர்ந்து கெடக்கு. பாலைக் கொட்டி வயித்திலே மண்ணைப் போட இருந்தியேடா பாவி. அப்படியா ஒரு ஓட்டம் ஓடுவே? பத்துப் பைசா சம்பாதிக்கத் துப்பு இல்லை.'' என்று திட்டியபடி திரும்பினாள். கபாலி கையிலிருந்த பொட்டலத்தை எரவாணத்தில் மறைத்து வைத்து விட்டுப் பெருமூச்சு விட்டான்.

''இன்னாடா அது?'' என்று சந்தேகத்துடன் கேட்டாள் தாயம்மா. ஏதாவது போதை சமாசாரமா? கடத்தல் பொருளா? திருட்டு விவகாரமா?''

''உனக்கு இன்னா? கம்னு கெட'' என்று எரிந்து விழுந்தவன் சாப்பிட்டுக் கொண்டிருந்த அப்பாவைப் பார்த்தான். ''அட! இன்னிக்குத்தான் ரிலீசா நீ? உசாரா இரு அப்பா. புதுசா இனுசுபெக்டரு வந்திருக்காரு நம்மூருக்கு. ராசவேலுவாம். ரொம்பக் கண்டிசனாம். எப்பேர்க்கொத்த ஆளானாலும் வளைச்சுப் பிடிச்சுடுறாராம். இப்ப நாலே



மாட்டிக்கத் தெரிஞ்சேன். தப்பிச்சு முடியாதுட்டேன்.'' என்று வெள்ளமாகப் பெருகிய வியர்வையைத் துடைத்தபடி எச்சரித்தான்.

''மகராசன் உன்னைக் கொண்டு போய் ரெண்டு வருசம் உள்ளே வெச்சார்னு நான் மாரியாத்தாளுக்குப் பொங்கல் படைக்கறேன். ரெண்டு வருஷம்னாலும் நிம்மதியா இருப்பேனே'' என்று கூறியபடி படி இறங்கிய தாயம்மா சட்டென நின்றாள்.

'என்ன பெயர் சொன்னான்?... ராஜவேலு ராஜவேலு... என் வேலு... என் வேலுவா இருக்குமா?'

தாயம்மாவுக்கு முதலில் வரிசையாகப் பிறந்தவர்கள் மூன்று பெண்கள். அப்புறம் வேலு. முனிசாமியால் என்றைக்குமே தாயம்மாவுக்குத் தொல்லைதான். இவனை நம்பிப் பிரயோசனமில்லை என்று தாயம்மா கடனில் மாடுகள் வாங்கி அதோடு பாடுபட்டு வயிறு வளர்த்து வந்தாள். பெண்களை எப்படியோ கல்யாணம் பண்ணிக் கொடுத்துவிட்டாள்.

கைக்குழந்தை வேலுவின் மேல் அவளுக்குக் கொள்ளை ஆசை. அப்பனைக்கொண்டு வளர விடாமல் அவனை நிறையப் படிக்க வைத்துப் பெரிய உத்தியோகத்துக்கு அனுப்ப வேண்டும் என்று ஆசை.

தெருவின் முதல் வீட்டில் வசிக்கும் தம்பதிக்கு நீண்ட நாட்களாகவே குழந்தை இல்லாத ஏக்கம். தாயம்மாவின் இடுப்பில் உட்கார்ந்து துருதுருவென்று விழிக்கும் குழந்தை வேலுவை வாங்கி ஆசை மீதூரக் கொஞ்சுவாள் ராஜலட்சுமி.

''குழந்தையை இங்கேயே விட்டுட்டு நீ போய் எல்லா வீட்டுக்கும் பால் அளந்துட்டு வாயேன் தாயம்மா. வீட்டுக்குப் போறப்போக் கூட்டிக்கிட்டுப் போயேன்'' என்றார் ராமசாமி.

அதுவும் சரிதான் - என்று தோன்றியது தாயம்மாவுக்கு. இரண்டு வயது வேலு விஷமம் செய்ய ஆரம்பித்திருந்தான். கீழே இறக்கிவிட்டுப் பால் அளக்கும்போது—ஓட்டமாக ஓடுவான். இல்லை பால் குவளைகளைப் பிடுங்குவான். வயிற்றில் வேறு எட்டு மாதம். நடக்க முடியாமல் சிரமமாக இருந்தது.

தாயம்மா சம்மதித்தாள். பிறகு அதுவே வழக்கமாகி விட்டது. கபாலி பிறந்த பிறகும் கூட தாயம்மாவேலுவைக் கூடவே அழைத்து வருவதும், ராஜலட்சுமியிடம் விட்டு பிறகு அழைத்துப் போவதுமாகவே இருந்தாள். அந்த நேரங்களில் ராஜலட்சுமி வேலுவின் கைகளில் பிஸ்கட்களைத் திணித்துவிட்டுச் சுவாமி பாட்டுக்களைச் சொல்லி அவன் அதை அப்படியே மழலையில் பிரதிபலிப்பதைக் கண்டு மகிழ்ந்து கொண்டிருப்பாள். அல்லது ராமசாமி அவனை மடியில் உட்கார வைத்துக் கொண்டு அவனுக்காகவே வாங்கிய சிலேட்டில் அவன் கைகளைப் பிடித்து ஆனா ஆவன்னா எழுதப் பழக்கிக் கொண்டிருப்பார்.

ஒருநாள் தாயம்மா காலிக் குவளையுடன் வேலுவை அழைத்துப் போக ராஜலட்சுமியின் வீட்டுக்குள் நுழைந்தாள்.

ராஜலட்சுமியின் கண்கள் பனித்தன. ''தாயம்மா! இந்த ஒரு வருஷத்துக்கும் மேலே வேலு எங்க கூட ரொம்ப ஒட்டுதலாப் பழகிட்டான். அவனை எப்படிப் பிரியறதுன்னே தெரியலே.''

ராமசாமி தொண்டையைக் கனைத்துக்-கொண்டார். ''தாயம்மா! நான் சொல்றேனென்னு தப்பா நினைக்காதே. வேலுவை நல்லாப் படிக்க வெக்கணும்னு ஆசைப்படறே. உனக்கானா வசதி இல்லே. புருஷனும் ஒழுக்கமில்லாதவன். சுத்து வட்டாரமும் இல்லேன்னு சொல்றே. நாங்க... நாங்க.. வேலுவை அழைச்சிக்கிட்டுப் போகட்டுமா? நீ ஆசைப்படறபடி நிறையப் படிக்க வைக்கறோம். நல்ல பண்புள்ள, நேர்மையாளனா வளர்க்கிறோம். இதனாலே எங்க குறையும் தீரும். உன் ஆசையும் நிறைவேறும்.'' திக்கித் திணறிக் கூறி முடித்தார்

ராஜலட்சுமி எதுவும் பேசாமல் ஏக்கத்துடன் பார்வையாலேயே கெஞ்சினாள்.

தாயம்மாவுக்குச் சுரீரென்றது. நன்றாக வளர்ப்பார்கள்தான். ஆனால் அதற்காக... பெற்ற பிள்ளையை அவர்களிடமே தூக்கிக் கொடுத்துவிட முடியுமா? வெடுக்கென குழந்தையைப் பிடுங்கிக் கொண்டு விடுவிடுவென வீட்டை நோக்கி நடந்தாள்.

''பாத்தியா அய்யா! ஏதோ புள்ளையைக் கொஞ்ச நேரம் விட்டுட்டுப்போன்னு சொன்னாங்களேன்னு பார்த்தா புள்ளையையே கொடுத்திடு. எடுத்துக்கிட்டுப் போறோம்னு சொல்றாங்களே. என்னய்யா நாயம் இது? பெத்த புள்ளையைக் கொடுப்பாங்களா?''

''துட்டு எவ்வளவு கொடுப்பாங்களாம் கேட்டியா? பிசாத்துக் காசெல்லாம் குடுத்தா வாங்காதே. நிறையக்கேளு'' என்றான் முனுசாமி.

அவ்வளவுதான். உடம்பெல்லாம் பற்றி எரியப் பத்திரகாளியாக எழுந்தாள் தாயம்மா. ''அடப் பாவி! அவங்க பாசத்தோட புள்ளையைக் கேட்டாங்க. முடியாதுன்னு வந்துட்டேன். நீ பணத்துக்குப் புள்ளையை விக்கச் சொல்லறியே. வேணாய்யா வேணும். இவன் இங்கே இருக்கவே கூடாது. குட்டிச்சுவரா ஆக்கிடுவே நீ. இல்லாட்டா குடிக்கப் பணம் இல்லேன்னு எங்கேயாவது கூலி வேலை செய்ய இவனை வித்துடுவே. அந்த மகராசிகிட்டயே வளரட்டும் என் செல்லம்.''

**தா**யம்மா வேலுவைத் தூக்கி ராஜலட்சுமி கையில் கொடுத்தாள். ''அம்மா! இது இனிமே உங்க பிள்ளை. அதான் சொல்லுவேன். இனிமே இவனுக்குத் தாய் தகப்பன் எல்லாம் நீங்க ரெண்டு பேரும்தான். இவனை நல்லா வளர்த்து போலீஸ் வேலைக்கு விடுங்க. இவனோட அப்பனைப் போல் இருக்கிற பொல்லாதவங்களைப் பிடிச்சுத் தண்டிக்கிற வேலையை இவன் கிட்டக் கொடுங்க'' என்றாள் ஆவேசமாக.

ராமசாமி நன்றியுடன் பார்த்தார். ''உன் விருப்பம் போலவே இவனை இன்ஸ்பெக்டர் ஆக்கிடறேன் தாயம்மா. திருப்திதானே?'' கனிவுடன் கேட்டார் ராமசாமி.

> ''உன் கௌரவம் உன் நாக்கு நுனியில் இருக்கிறது''. -அங்கேரி
>
> ''மூடின பாலில் ஈ விழுவதல்லை''
> -அல்பேனியா
>
> பழமொழிகள் தொகுப்பு:
> கௌரி தியாகராஜன்



தாயம்மா ஆசையுடன் வேலுவின் கன்னத்தில் முத்தமிட்டுத் திரும்பினாள்.

முனுசாமிக்குப் போதை தெளிந்ததும் தாயம்மா வேலுவை ஒருவரிடம் தந்துக் கொடுத்து விட்டதாகத் தெரிவித்தாள். அவன் மிரட்டியும், கெஞ்சியும், பலமுறை கேட்டும் கூட அவள் யாரிடம் கொடுத்தாள் என்பதைத் தெரிவிக்க மறுத்து விட்டாள்.

**ஆ**யிற்று. இருபத்தைந்து வருஷங்கள் ஓடிவிட்டன. இந்நேரம் ராஜவேலு போலீஸ் வேலையில் சேர்ந்திருப்பான். கல்யாணம் ஆகி மருமகளும் வந்திருப்பாள். இங்கே கபாலியும் கிரமப்படி வளர்ந்திருந்தான். பலமுறை அரசாங்க விருந்தாளியாகவும் இருந்துவிட்டு வந்தான். அ[illegible]திக ளோடு பழகியதில் புதுப் புது வகையான திருட்டு வியாபாரங்களும் கற்றுக் கொண் டான்.

முன்பெல்லாம் தாயம்மா புருஷனை மட்டும் தான் திட்டினாள். இப்போது பிள்ளையையும் சேர்த்துத் திட்ட ஆரம்பித்தாள். நொந்து போகும் நேரங்களில் அவள் ஆறுதலுக்காக நினைத்துக் கொள்வது வேலுவைத்தான். அவன்.... அவனு... இன்ஸ்பெக்டர் ராஜவேலுவாக... அப்படியும் இருக்குமோ?

**பூ**சினாற்போல் அழகாய்ச் சிவப்பாய் நின்றவளை ஆசை தீரப் பார்த்தாள் தாயம்மா. மகராசி! நீ என் மருமகளா இருந்தா எவ்வளவு நல்லா இருக்கும்?

''பால் தினம் ஊத்தட்டுமா?''

''எனக்குப் பால் வேணும்தான். இந்த ஊர்லே தாயம்மாங்கறவங்க ஊத்தற பால் நல்லா இருக்குமாமே!'' என்றாள்.

தாயம்மாவுக்குச் சிலிர்த்தது. ''யாரும்மா சொன்னாங்க?''

''எங்க மாமியார்தான். எங்க வீட்டுக்காரர் பிறக்கிறப்போ இங்கேதான் எங்க மாமனார் வேலை பார்த்தாராம்.''

'எங்க வீட்டுக்காரர் பிறக்கறப்போ' - தாயம்மா நிம்மதிப் பெருமூச்சு விட்டாள். இதுவரை வேலு என் பிள்ளை என்ற ரகசியம் வெளியாகவில்லை.

துளி சந்தேகத்தையும் கேட்டுக் கொண்டாள்: ''நான்தாம்மா தாயம்மா. உங்க மாமனார் யாரு? நினைவில்லையே'' என்று கேட்டாள்.

அந்தப் பெண் அவளை ஹாலுக்கு அழைத்துப் போனாள். ''அதோ பார்! போட்டோவிலே இருக்கிறதுதான் எங்க மாமனார்—மாமியார்.'' அவர்களேதான் ராஜலட்சுமியும் ராமசாமியும்தான். ஆனால்... தாயம்மாவுக்குத் திக்கென்றது. ''ஏம்மா...அவுங்களுக்கு ஏம்மா மாலை போட்டிருக்கீங்க? இவங்களை நல்லா நினைவு வருதும்மா எனக்கு. ரொம்ப நல்லவங்களாச்சே!''

அந்தப் பெண் கலங்கிய கண்களைத் துடைத்துக்கொண்டாள். ''அம்மா அப்பா இல்லாத குறையைத் தீர்க்கிற மாதிரிதான் அவங்க என்கிட்ட அன்பா இருந்தாங்க. ஆனா அது தெய்வத்துக்குப் பொறுக்கலை. போன வருஷம் ஒரு பஸ் விபத்திலே அவங்க ரெண்டு பேரும் போயிட்டாங்க.''

இந்தியாவின் கோயில்கள்–1

# சிற்பக்கலைநயம்வாய்ந்த கிச்சிங்ஸ்வரா கோயில், ஒரிசா

அக்காலத்து கலைத்திறனை இக் கோயிலின் கற்கள் பேசுகின்றன. பூ வேலைப்பாடுகளும், வடிவமைப்புகளும், அதிநுட்பமான கட்டிடக்கலை வல்லமையும் கலைஞர்களின் கலை ஆர்வத்தின் பிரதிபலிப்பாகத் திகழ்கின்றன. இவ்வாறுகத்தான் காலங்காலமாக கல்லிலே கலை வண்ணம் கண்டு வழிவழி மரபை உலகறியச் செய்துள்ளனர்.

பழங்கால மரபுகளை மனதில் கொண்டு தாவண்கெரே காட்டன் மில்ஸில் புராண அழகை பிரதிபலிக்கும்படியான துணி வகைகளைத் தயாரித்தளிக்கிறோம். நுட்பமான நெசவு, கலைஞர்களின் கைவண்ணம்—எண்ணிலடங்கா துணி வகைகள், ஒவ்வொருவரும் பாராட்டும் வண்ணம்.

சிறந்த துணிமணிகளை உயர்ந்த மரபாகக் கருதுவது

## தாவண்கெரே

தி தாவண்கெரே காட்டன் மில்ஸ் லிமிடெட்,
ஹனுமந்தப்பா கட்டிடம், சித்ரதுர்கா ரோடு,
தாவண்கெரே–577 002.
ஷோரூம்:
காவேரி பவன், பெங்களூர் 560 009.
தாஜிபன்பேட், ஹுப்ளி 580 020.
சித்ரதுர்கா ரோடு, தாவண்கெரே 577 002.

இச்சிங்ஸ்வரா கோயில்,
இச்சிங், மயூர்பாஞ், ஒரிசா.
கி.பி. 11-12-ஆம் நூற்றாண்டு

TA/DCM/A/TAM



ராமு: ஏண்டா சோமு, ஹையர் செகண்டரியில சைபர், சைபர் மார்க்கே வாங்கியிருக்கியே, எந்த காலேஜ்லடா சேத்துப்பான் உன்ன?

சோமு: எத்தனை சைபர் வாங்கினா என்னடா நமக்காகத் தானே இருக்கு மெடிகல் காலேஜ்!

-சி. டி. பத்மா

தாயம்மாவுக்கும் கண்கள் கலங்கின. மாலாவுக்கு முன் பின் தெரியாத அந்தப் பால் விற்கும் பெண்மணியின் அபரிமிதமான அன்புக்குக் காரணம் புரியாமல் வியப்பாக இருந்தது.

ராஜவேலுவின் கண்டிப்பும் கெடுபிடியும் ஊரையே ஒரு கலக்குக் கலக்கின. முனுசாமி, கபாலி போன்றோர் புழுங்கினார்கள்.

ஒரு நாள் மளிகைக் கடைக்காரர் வீட்டு வாசலில் ஏகக் கூட்டமாக இருந்தது. வேடிக்கை பார்த்துக் கொண்டிருந்த காளியை விசாரித்தாள் தாயம்மா.

''எல்லாம் புதுசா வந்திருக்காரே இனுசுபெக்டரு. அவரு வேலைதான். மளிகைக் கடையிலே எடை சரியில்லையாம். கலப்படமாம். என்னென்னமோ சாமானெல்லாம் ரகசியமா வியாபாரம் பண்ணுறாராம். இவருதான் கழுகு மாதிரி மோப்பம் பிடிக்கிறாரே. கண்டு பிடிச்சு, சோதனை போட்டாரு. கடைக்காரரை ஸ்டேஷனுக்கு இழுத்திட்டுப் போயிட்டாங்க. அவரு சம்சாரம் மண்ணை வாரி இறைக்கிறா.''

தாயம்மாவுக்குத் திக்கென்றது. 'வேலு! இவள் போடும் சாபம் உன்னை நெருங்காதுடா. என் பெத்த வயிறு வாழ்த்தறவரையிலும் உனக்கு ஒரு கெடுதலும் வராதுடா.'

''என்ன காளி! மளிகைக் கடைக்காரரு இப்படிப்பட்டவரா? புருஷன் யோக்கியதை தெரிஞ்சும் இந்தம்மா இனுசுபெக்டரைப் போய்த் திட்டுதே. இது என்ன நாயம்?''

''அதுக்காவ? நம்மளாட்டம் ஏழை-பாழைங்க அப்பிடி இப்பிடி இருக்கிறதுதான். அதுக்காகத் தொட்டாக் குத்தம், எடுத்தாக் குத்தம்னு போறு. என்னடி? என்ன கண்டிப்பு என்ன சட்டம் வேண்டிக் கிடக்குது!'' காளி ஆத்திரப்பட்டாள். அவள் கணவன் முதல் நாள்தான் ஜேப்படி குற்றத்துக்காகக் கைதாகி இருக்கிறான்.

**அ**ன்று ஏதோ ஓர் ஊர்வலம். சம்பள உயர்வு கேட்டு அமைதியான முறையில் நடக்க ஏற்பாடு செய்யப்பட்ட ஊர்வலம் தான். முனுசாமி போன்ற விஷமிகள் அதில் கலந்து கொண்டு கலகம் விளைவித்து, பாதுகாப்புக்காக வரும் போலீஸாருடன் மோதி இந்தச் சந்தர்ப்பத்தைப் பயன்படுத்தி ராஜவேலுவைப் பழி தீர்க்க ரகசியத் திட்டம் தீட்டியிருந்தார்கள். தாயம்மாவின் துரதிர்ஷ்டம் இந்தச் செய்தி அவளிடம் எட்டவில்லை.

பால் தராமல் உதைக்கும் மாட்டை தாஜா செய்து கொண்டிருந்த தாயம்மாவிடம் ஓடி வந்தாள் காளி. ''தாயம்மா! உனக்குத் தெரியாதா? நீ பாட்டுக்கு நிக்கறியே'' என்றாள் மூச்சு வாங்க.

தாயம்மாவுக்குப்பகீரென்றது. ராஜவேலு! அவனுக்கு ஏதாவது ஆகிவிட்டதா? ''என்ன காளி! இனுசுப்பெக்டருக்கு என்ன... நல்லாத்தானே இருக்காரு?'' கடவுளே! அவனுக்கு ஒன்றும் ஆகக் கூடாது.

''அந்தப் பாவிக்கு என்ன? உன் புருசனுக்குத்தான் ஆபத்து. ஊர்வலத்திலே கலாட்டா ஆகிப்போச்சு. உன் புருஷனைப் போலீஸாரு... அதான் அந்த இனுசுபெக்டரு சுட்டுட்டாரு. ரத்தமாக் கொட்டி விழுந்துட்டாரு. போ.... ஓடு...''

தாயம்மாவுக்குச் சிலீரென்றது. ராஜவேலு...உன்னுடைய அப்பாவுக்குக் கெடுதலா... பாவி... அவர் என் புருஷன்டா. என் தாலிக்கு உத்தரவாதன்டா... அவரையே கொன்னுட்டியே...தாயம்மாவுக்கு அடிவயிற்றில் பொங்கிய எரிச்சல் வாய் வழியாக வெடித்தது.

''அடப் பாவி! நீ நல்லா இருப்பியா?''

'தலைவிரி கோலமாக ஓடினாள் தாயம்மா. முனுசாமிக்கு ஒன்றுமில்லை. போலீஸார் தற்காப்புக்குச் சுட்ட துப்பாக்கிக் குண்டு அவன் காதை உரசிக் கொண்டு போக மயங்கி விழுந்திருந்தான். தாயம்மா போகும்போது எழுந்து உட்கார்ந்து சோடா குடித்துக் கொண்டிருந்தான்.

தாயம்மா நிம்மதிப் பெருமூச்சு விட்டாள். அப்புறம்தான் அவளுக்கு ராஜவேலுவின் நினைவே வந்தது. திகீரென்றது அவளுக்கு. நான்... நானு... சொன்னேன் 'அடப் பாவி நீ நல்லா இருப்பியா!' என்று! கடவுளே! ஏன் என் வாயிலே இப்படி ஒருவார்த்தை வந்தது? பெத்த பிள்ளையை நானே மனசாரத் திட்டினேனே!

வெறியுடன் எழுந்தாள். ''எங்கேய்யா இனுசுபெக்டரு...''

அவள் எதற்கு இன்ஸ்பெக்டரைத் தேடுகிறாள் என்று புரியாமல் பதில் கூறினார்கள் யாரோ. ''கூட்டத்திலே யாரோ வீசின கருங்கல் அவர் தலையிலே பட்டு மண்டை உடைஞ்சு ஆசுபத்திரிக்குத் தூக்கிட்டுப் போயிருக்காங்க.''

தாயம்மா 'ஓ'வென அலறினாள். ''என் கண்ணே! நானே சாபம் போட்டுட்டேனடா! ஊரில் எத்தனையோ பேர் உன்னைச் சபிச்சப்போ உன்னைப் பெத்த தாயோட வாழ்த்து உன்னைக் காப்பாத்திச்சு. ஆனா இப்ப உன்னைப் பெத்தவளாகிய நானே சாபம் கொடுத்துட்டேனே! என் செல்வமே... பொழைச் சிருடா... பெத்தவ சொல்றேன் பொழைச் சிருடா....'' முனிசாமியும் கபாலியும் திகைத்தபடி பார்க்கத் தாயம்மா வெறியுடன் ஆஸ்பத்திரியை நோக்கி ஓடினாள்.

# அறுபதுக்கு மேல் ஒரு ஆசை!

அன்னம்



அந்தக் கதவுகளுக்கு அப்பால்...

கைவளையல்கள் குலுங்கும் ஒலி... ''உம்'' என்று செல்லமான சிணுங்கல்கள்... புரண்டு படுக்கும்பொழுது கட்டில்களின் 'கிரீச்'.

எனக்குப் புரிந்தது. என் பக்கத்தில் படுத்திருந்த அவளைப் பார்க்கிறேன். இடுப்புச் சற்றுக் கூன் விழ ஆரம்பித்திருந்தது. எலும்பையும் சதையையும் மெல்லிய 'பேப்பர் வைத்து மூடியதுபோல் ஒரு தேக வாகு. நாற்பது வருஷங்களுக்கு முன்பு தளதள வென்று இருந்தவள்—எப்படி வாடிவிட்டாள்!

என்னைப் பார்த்துக் கொள்கிறேன். அறுபத்தைந்து வயதாகிறது. தலையில் எங்கேயோ இரண்டு நரை முடிகள். ஒரு பல்கூட விழவில்லை. மூக்குக் கண்ணாடி மாட்டவில்லை. ஊன்றுகோலை நாடவில்லை. நான் ரிடையராகி ஏழு வருஷங்கள் ஆகிறது என்றால் யாரும் நம்ப மாட்டார்கள்.

உள்ளே என் பிள்ளை — அவன் மனைவி. திருமணமாகிச் சில மாதங்கள்தான் ஆகின்றன. இரண்டு பேருமாக ஏதோ திரைப்படம் பார்த்து வந்து இருக்கிறார்கள். அந்தப் படத்தின் விளம்பரத்தை நான் பத்திரிகைகளில் பார்த்திருக்கிறேன். முழுப் பக்க அளவுக்கு 'ஏ' போட்டிருக்கும்.

அவர்கள் படுக்கப் போகும்போது மணி பதினொன்று. நாங்கள் தூங்கி விட்டதாக நினைத்து அவன் அவளை எட்டிப் பிடிக்க—அவள் 'உஷ்' என்று வாயில் விரல் வைத்து எச்சரித்தபடி விலக — நான் சிரித்துக் கொண்டேன். ஒரு காலத்தில் நான் ஆடிய ஆட்டம்தானே இது!

உள்ளே அவர்கள் மெதுவான குரலில் பேசியது என் காதுகளில் தெளிவாக விழுந்தது. அந்தப் படத்தைப் பற்றித்தான். இரட்டை அர்த்தம் தொனிக்கும் பச்சை வசனங்கள் — பாடல்கள்.

நான் பார்க்கக் கூடாதா?... அல்ப ஆசை தான். வயசுக்குப் பொருந்தாத சபலம்தான்! ஆனால் அதை அடக்க முடியவில்லை. அவளுக்கும் படம் பார்க்கப் பிடிக்கும். கல்யாணம் ஆன புதிதில் நானும் அவளும் திருச்சி ராஜா டாக்கீசில் படம் பார்த்து விட்டு இரவு பதினொன்று அடிக்கும் சமயம் பூனைபோல் மெதுவாக வீட்டுக்குள் வந்து, தூங்கும் பாட்டியின் மேல் இடறி விழுந்து—அவள் அலற—

நான் சிரித்தேன்.

அவனிடம் கேட்க எனக்குத் தயக்கமாக இருந்தது. அந்தப் புதுப் பெண் என்ன நினைத்துக்கொள்வாள்? கிழவனுக்கு என்ன படம் என்று கேலியாக நினைத்தால்.... கிழவியிடம் விஷயத்தைச் சொன்னால் நான் கூட வர மாட்டேன் என்று ஒதுங்கிக் கொள்வாள்.

மறுநாள் காலையில் அவன் ஆபீஸ் போகும்போது அவன் காதுகளில் போட்டு வைத்தேன். ''சாயங்காலம் நானும் உன் அம்மாவும் டவுனுக்குப் போகிறோம். அங்கே ஆடி வீதியில் பகவத் கீதை பிரவசனம்



நடக்கிறது... நானும் உன் அம்மாவும்...''

''அதற்கென்ன... போய் வாருங்கள்!'' என்றான் என் பிள்ளை.

நாங்கள் இருந்தது நகருக்கு வெகு தூரத்தில் இருந்த ஒரு காலனி. ஆகவே சீக்கிரமாகப் புறப்பட்டுத் தாமதமாக வந்தாலும் யாரும் சந்தேகப்பட்டுக் கேள்விகள் கேட்க மாட்டார்கள்.

காலட்சேபம் என்று சொல்லி அவளைச் சினிமாத் தியேட்டர் முன்பு இறக்கியதும் அவள் ஒரு கணம் திகைத்தாள். பிறகு சிரித்துக் கொண்டாள். ''அறுபது தாண்டியும் ஆசை விடவில்லை இந்த மனிதனுக்கு!'' என்ற கேலிச் சிரிப்பு.

நாங்கள் போகும்போது படம் தொடங்கி விட்டது. அவசரம் அவசரமாக டிக்கெட் வாங்கிக் கொண்டு அவளை இழுக்காத குறையாகக் கூட்டிக் கொண்டு இருட்டில் தட்டித் தடவிப் போய் உட்கார்ந்தோம்.

பற்பசை — ஹேர் ஆயில் — சோப் விளம்பரங்கள். அவை முடிந்தவுடன் மெயின் படம் தொடங்கியது. அது இருபது வருஷங்கள் முன்பு நான் பார்த்திருந்த பழைய புராணக் கதைப் படம்.

எனக்கு விளங்கிற்று. இரண்டு தியேட்டர்கள் இணைந்திருந்த அந்தப் பெரிய கட்டிடத்தில் என் அவசரம் காரணமாக 'அந்த'ப் படம் ஓடிய தியேட்டர்கவுண்டரில் நிற்காமல் 'இந்த'ப் படத்திற்கு டிக்கெட் வாங்கியிருக்கிறேன்.

''என்ன இது?... உங்களுக்குக் கூடப் புராணப் பட மோகம்?'' எனச் சீண்டினாள் கிழவி.

திருடனுக்குத் தேள் கொட்டினால் முனகவாவது செய்வான். நான் மூச்சுக் காட்டவில்லை.

---

சுறுசுறுப்பு, சிந்தித்துச் செயல் புரியும் வேகம், துளிக்கூட காமிரா கூச்சமில்லாத நடிப்பு, உடலில் ஆடையே இல்லாதிருந்தும் ஆபாசமில்லாத கவர்ச்சி... இவ்வளவு பாராட்டும் யாருக்குத் தெரியுமா? இதில் நடிக்கும் ஒரு தேவர் பிராண்ட் ஆறறிவு நாய்க்குத்தான். மற்றபடி இந்த நாய்க்கு இருந்த அக்கறைகூட படம் சம்பந்தப்பட்ட யாருக்குமே காணோம்.

காரைக்குடி நாராயணனின் அசிரத்தையான டைரக்ஷனும், படத் தொகுப்பும் உட்கார விடாமல் பாடாய்ப் படுத்துகின்றன. மௌனப் படக்காலத்து செட்களும் பொருத்தமற்ற ஆடைகளும்... சோதனை சோதனை! நீல ஸ்ட்ரைப் சர்ட்டும், கலர் பேண்ட்டும் அணிந்து கொண்டு, கையில் உயிலும், கழுத்தில் வெள்ளை டையுமாய் (வக்கீலாம்) ஒருவர் வருகிறார் பாருங்கள்! ஒரு கோட் கூடக் கிடைக்கவில்லையா? டையையாவது தவிர்த்திருக்கலாமே! சட்டதாரிகள் கவனிக்க!

சுமன்-பானுசந்தர் உண்டு
கராத்தே இல்லை.
மாயா உண்டு
காபரே இல்லை — தப்பித்தோம்.
ஆனால்
இளையராஜா இருந்தும்
இன்னிசை இல்லை.
நகைச்சுவைக் காட்சிகள்
நிறைய இருந்தும் ஸாரி
சிரிப்புக் கொஞ்சமும் வரவில்லை.

இப்படிப் படங்கள் எடுப்பதை நிறுத்தும் போது நல்லது நடந்தே தீரும்.

நம்புவோம்.

-சிந்து சீனா

## நல்லது நடந்தே தீரும்...









# காதுலர்!

காதைக்கிள்ளிக் காதலிக்கும் நான்கு
ஜோடிகளை இங்கே பார்க்கிறீர்கள். எல்
லாமே கிட்டத்தட்ட ஒரே ஸ்டைல்.
இந்தக் 'காது'லர்களில் யாருடைய
காதுகள் திருகப்படுகின்றன?

தொகுப்பு: திரைஞானி

விடை 52ம் பக்கம்



# இலக்கியத்தில் இறையுணர்வு

## கேள்வியே பதில்

**கீரன்**

**மா**ணிக்கவாசகரின் திருவாசகத்தில் 'திருவெம்பாவை' ஒரு பகுதி. இது இருபது பாடல்களைக் கொண்டது என்பதும் மார்கழி நோன்பில் ஓதப் பெறுவன என்பதும் எல்லோராலும் அறியப் பட்டவை. அதில் ஒரு சுவையான பாடல்.

மார்கழி நோன்பை மேற்கொண்ட கன்னிப் பெண்கள் திருக்கோயிலுக்குச் சென்று அங்கு திருக்கோயிலில் பணியாற்றும் 'பிணாப் பிள்ளை'யிடம் சில கேள்விகளைக் கேட்கின்றனர். 'கன்னிகா ஸ்திரீகள்' என்று கிறிஸ்தவ சமயத்தில் பணி புரியும் பெண்களைப் போல, இந்து சமயத் திருக்கோயில்களில் பணி புரியும் பெண்களுக்குப் 'பிணாப் பிள்ளை' என்று பெயர்.

''இறைவன் திருவடி, முடி எங்குள்ளன?

''அவன் திருமேனி எத்தகையது?

''அவன் எங்கிருப்பான்?

''அவன் ஊர் எது? பேர் எது?

''அவனுக்கு வேண்டியவர் யார்? வேண்டாதவர் யார்?''

இவையே கேள்விகள்! இதற்குப் பிணாப் பிள்ளை பதிலாக மாணிக்க வாசகர் கூறும் பாடலில்தான் எத்தனை நயம்!

பிணாப்பிள்ளை ஒவ்வொரு கேள்விக்கும் ஆழ்ந்து சிந்தித்துப் பதில் கூறுகிறாள்.

மனிதர்களுக்கு அமைந்த மெய், வாய், கண், மூக்கு, செவி என்ற ஐம்புலன்களில் நீண்ட தூரம் செல்லக் கூடிய புலன் வாயே; அதாவது நாக்கு. மெய்யின் உறுப்புக்கள் கொஞ்சம் தூரமே செல்லும். செவி, அதையடுத்து மூக்கு. அதையடுத்துக் கண் சற்றுத் தொலைவான தூரத்தில் உள்ளதை உணருவன. நாக்கு எவ்வளவு தூரத்தில் உள்ளதையும் குறிப்பிடும்.

பாவைப் பெண்கள் கேட்ட முதல் கேள்வி, ''இறைவன் திருவடி எங்கிருக்கிறது?'' என்பது தானே! பிணாப்பிள்ளை முதலில் ''இறைவன் திருவடி பூமிக்குக் கீழும் உள்ளது'' என்று சொல்ல நினைத்தாள். ஆனால் சொல்லவில்லை. காரணம் இந்தப் பதிலைச் சொன்னவுடன் ''பூமிக்கும் கீழ் இல்லையா?'' என்று பாவைப் பெண்கள் திரும்பக் கேட்பார்களே! அதனால் பிணாப் பிள்ளை ''பாதாளம் ஏழினும் கீழ்'' என்று தொடங்கினாள். அப்போதும் அவள் பதியச் சொல்லவில்லை. ஏனெனில் ''பாதாளம் ஏழினும் கீழ்'' என்றால், ''அதற்கும் கீழே இல்லையா?'' என்ற கேள்வி பிறக்குமே! அதனால் பிணாப் பிள்ளை ஆழமாகச் சிந்தித்து ஒரு பதிலைக் கூறுகிறாள். ''பாவைப் பெண்களே! இறைவன் திருவடி பாதாளம் ஏழினும் கீழ்'' மட்டுமல்ல; உங்கள் நாக்கு எதுவரை சென்று சொற்களால் குறிக்குமோ — எங்கே உங்கள் நாக்கு சொல்ல முடியாமல் உங்கள் சொல் கழிகிறதோ அதற்கும் கீழே இருக்கிறது!'' என்றாள்.

''பாதாளம் ஏழினும் கீழ் சொற்கழிவு பாதமலர்'' என்பது விடை.

அதேபோல், ''இறைவன் திருமுடி எங்கே இருக்கிறது?'' என்ற கேள்விக்கு விடை ''எல்லாப் பொருளும் எங்கே முடிகிறதோ அவற்றுக்கு மேல்'' என்றாள்.

''அவன் திருமேனி எத்தகையது?'' இந்தக் கேள்விக்கு விடை, ''உமையுடன் கூடியது! ஆனால் அவனுக்குத் திருமேனி ஒன்றல்ல!''

''அவன் எங்கிருப்பான்?'' என்ற வினாவுக்கு ''விண்ணும் மண்ணும் துதித்தாலும் சொல்ல முடியாத இடத்து இருப்பான். அவனை எளிதாகக் காணும் இடம் தொண்டர்கள் உள்ளத்தில்.''

இந்தக் கேள்விகளுக்கு விடை கூறிய பின்னர், பாவைப் பெண்களின் மற்றக் கேள்விகளுக்கு அவர்கள் கேள்வியையே பிணாப் பிள்ளை பதிலாகக் கூறுவது மிகச் சிறப்பானது. மற்றகேள்விகள் என்ன?

அவன் ஊர் எது? பேர் எது? வேண்டியவர் யார்? வேண்டாதவர் யார்? என்பன.

மேற்குறித்த கேள்விகளைப் பாவைப் பெண்டிர் எந்தச் சொற்களால் கேட்டனர்?

''ஏதவன் ஊர்? ஏதவன் பேர்? ஆருற்றார்? ஆர் அயலார்?'' என்று கேட்டனர்.



இந்தக் கேள்விக்குப் பிணாப் பிள்ளை பதில் கூறவில்லை. ஏன்?

கேள்வியையே பதிலாக்கி விடுகிறாள்.

ஏதவன் ஊர்? என்ற கேள்விக்குப் பதில் ஏதவன் ஊர் என்பதே. ஏதவன் பேர் என்பதற்கு விடை ஏதவன் பேர்! ஆருற்றார்? ஆர் அயலார்? என்பவற்றுக்கு விடைகள் ஆருற்றார்: ஆர் அயலார்! என்பனவையே!



'ஆம்; அவனுக்கென்று குறிப்பிட்டுச் சொல்ல ஒரு பேர், ஒரு ஊர் எனத் தனியே இருந்தால் அல்லவா ஊரையும் பேரையும் சொல்லலாம்? அவற்றுக்கு இன்னார் உற்றவர், இன்னார் அயலவர் என விருப்பு வெறுப்பு இருந்தால் அல்லவா யார் உற்றார், யார் அயலார் எனக் கூறலாம்?

''பாதாளம் ஏழினும் கீழ் சொற்கழிவு பாதமலர்
போதார் புனைமுடியும் எல்லாப் பொருள் முடிவே
பேதை ஒருபால்; திருமேனி ஒன்றல்லன்;
வேதமுதல் விண்ணோரும் மண்ணும் துதித்தாலும்
ஓதஉலவா ஒருதோழன்; தொண்டருளன்
கோதில் குலத்து அரன் கோயில் பிணாப் பிள்ளைகாள்
ஏதவன் ஊர்? ஏதவன் பேர்? ஆருற்றார்? ஆர் அயலார்?
ஏதவனைப் பாடும் பரிசேலோர் எம்பாவாய்!

(சிருங்கேரி ஸ்ரீ சாரதா பீடத்தின் 35வது பீடாதிபதியாக ஆன்மீக, பக்தி, சமூக நெறிகளைப் பரப்பி மஹா சன்னிதானமாக அருள் புரிந்துவரும் ஸ்ரீ வித்யா தீர்த்த பாரதி சங்கராச்சாரியார் அவர்கள் ஆஸ்ரமம் ஏற்று ஐம்பதாண்டுகள் நிறைவு பெறுகின்றன. இத்தருணம் பக்த கோடிகளின் வேண்டுகோளுக்கிணங்கி சென்னைக்கு எழுந்தருளியிருக்கும் இம்மகானிடம் சில விளக்கங்கள் கேட்டோம். ஸ்ரீ மகா சந்நிதானம் அருள் நோக்குடன் பொறுமையாய்ப் பதிலளித்தார்கள்.)



தற்போதைய சமுதாய சூழ்நிலையில் மக்களிடையே தெய்வ பக்தியை விட தெய்வ பயமே அதிகமாகக் காணப்படுகிறதே! இது சரிதானா?

மனிதன் ஏதாவது துன்பத்தில் மாட்டிக் கொண்டா அவனுக்குத் தெய்வ பக்தி வரும். சம்பாதிக்கணும்னு ஆசை வந்தா அவனுக்குத் தெய்வபக்திவரும். தெய்வஸ்வரூபத்தைத் தெரிஞ்சுக்கணும்னு ஆசை வந்தா அவனுக்குப் பக்தி வரும். தெய்வ ஸ்வரூபத்தை உணர்ந்துண்டு பரிபூரண நிலை அடைஞ்சவனுக்கும் பக்தி இருக்கும். இது மாதிரி காரணம் இல்லாம [illegible] பக்தி வருவது அபூர்வம்.... இந்தக் கா[illegible]லே ஏதாவது ஆபத்துலே மாட்டிண்டா [illegible]னுக்கு அதிகமாகப் பக்தி வரது. இதுலே தப்பு ஒண்ணுமில்லையே!

பயத்துனாலே வர பக்திலே பயம் போயிடும் சூழ்நிலை ஏற்படறப்போ பக்தி போயிடாதா?

அப்படி—இல்லையே... பகவானை வழிபட்டேன். அதனாலே பயம் போயிடுத்து. இனிமே இதுமாதிரி பயம் வரக்கூடாதுன்றதுக்காகவே பகவானை சரணமடையணும்னு பக்தி நீடிச்சு இருக்குமே தவிர நீங்கிடாது.

இறைவழிபாட்டுக்கு அனுமதிக்க சில ஆலயங்களிலே கட்டணம் வசூலிக்கிறார்களே.. இது சரியா?

பகவான் தரிசனம் பைசா இல்லாமல் கிடைக்க வேண்டியது நியாயம். அர்ச்சகர்களுக்குச் சம்பளம் கொடுத்து, பகவானுக்கு பூஜை, உற்சவங்கள் செய்து கோயிலைப் பராமரிக்க வசதி இல்லாமப் போனால், இது மாதிரி பைசா வாங்கறதைப் பொறுத்துக்கலாம்... மற்றபடி தரிசனத்துக்குக் கட்டணம் வாங்கக் கூடாதுதான்!

ஒலிபெருக்கிகளின் அலறல்.... ஆடம்பர ஏற்பாடுகள்... விளம்பரங்கள் இவையெல்லாம் இறை வழிபாட்டுக்கு அவசியம்தானா?

இதெலாம் இல்லாம இருக்கிறது நல்லதுன்றது என்னோட சொந்த அபிப்பிராயம். 'லௌட் ஸ்பீக்'கரை அலற விட்டு எவரையும் தூங்க விடாம, எதையும் சிந்தனை செய்ய விடாம, வியாதியஸ்தர்களுக்கு தொந்தரவு கொடுத்துண்டு... இதெல்லாம் அவஸ்யம் இல்லே. எத்தனை பேர் கேட்கணுமோ அவாளுக்கு மட்டும் கேட்கிற மாதிரி போட்டா போதும்.

ஆலயங்களுக்குச் சேர்ந்த செல்வத்தைத் துஷ்பிரயோகம் செய்வதும், இறைவன் பெயரால் வியாபாரம் செய்வதும் தற்போது மலிந்து காணப்படுகிறது. இறைவன் சன்னிதானத்தில் இது எப்படி சாத்தியமாகிறது?

இதெல்லாம் தப்பு. பகவான் பேரையும் செல்வத்தையும் தர்மத்துக்குத்தான் உபயோகிக்கலாமே தவிர சொந்தத்துக்கு உபயோகிக்கக் கூடாது.

கூடாதுன்னு சொல்றேள்.... இது மாதிரி செய்யற மனுஷாள் நல்லா இருக்காளே...?

அதைச் சொல்றேளா?... திருடன்கூட திருடிட்டு கொஞ்ச நாள் மாட்டிக்காம நன்னாத்தான் இருக்கான். போலீஸ்லே மாட்டிண்டதும் தண்டனை அனுபவிச்சாகணுமே... கர்மான்றது உண்டு.. இது மாதிரி அநியாயம் செய்யறவங்க புத்ர சோகம் வியாதின்னு அனுபவிச்சாகணும். வெளியே சந்தோஷமா இவர்கள் தோன்றினாலும் உள்ளுக்குள் அனுபவிப்பார்கள்.

கண்ட கண்ட இடங்களில் தற்போது கோயில் கட்டறதைப் பார்க்கிறோம். இது வரவேற்கத் தக்கதுதானா?

இருக்கிற கோயிலைச் சரியா பராமரிக்கணும். ஜனங்களுக்குக் கிட்டத்துலே கோயில் இல்லேன்னா கட்டலாம். மற்ற

# விளக்கம் கேட்டோம் தெளிவு பெற்றோம்

படி சிலபேர் குடும்பத்திலே உள்ளதோஷம் நீங்கணும்னு சொந்தமா விநாயகர் பிரதிஷ்டை செய்யறதுண்டு. சொந்தமா கட்டிண்டு, சொந்தமா பராமரிக்கணும்.

தெய்வத்தின் அவதாரம், தெய்வத் தன்மை வாய்ந்தவர், (Godman) என்று தம்மைத் தாமே கூறிக் கொள்பவர்கள் தற்போது பெருகி வருகிறார்கள். இதைப் பற்றி தங்களோட அபிப்பிராயம் என்ன?

இது இந்திர ஜாலம். இந்திர ஜாலம்னு தெருவிலே இருக்கிற பாம்பு ஆட்டக் காரன்கூட நிறைய இந்திர ஜாலம் காட்டுவான். ஆனால் அவன் தெய்வம்னு சொல்றதில்லே.

இதனால மக்களிடையே மத நம்பிக்கையும் தெய்வ நம்பிக்கையும் வளரும் நன்மை உண்டா?

சரியான நம்பிக்கை வளரும்னு சொல்லிட முடியாது. ஆச்சரியத்தினாலே வர நம்பிக்கை முதலில் ஏற்பட்டாலும் பிறகு போயிடும். சாஸ்திர முறையிலே வர பக்திதான் ஸ்திரமாக இருக்கும். இந்த முறையிலே வர பக்தி ஜாஸ்தி நாள் நிக்கறதில்லே... கடைசிலே அவர்கள் விஷயத்திலேயே இவர் மோசமான ஆள் என்று மக்களுக்குத் தெரிஞ்சுடும்.

பிறப்பினாலே வந்த மதத்தை உதறி, சூழ்நிலை காரணமா வேறு மதத்துக்கு மாறுவர்கள் அவர்கள் இணையும் புதிய மதக் கோட்பாடுகளிலும் அம்மதத்துக்கான இறை உ... உண்மையிலேயே மனம் ஒன்றிட முடியுமா?

எதுல பொறந்தானோ அதுலேயே நம்பிக்கை இல்லாம இன்னொண்ணுக்கு எவன் போறானோ அவனுக்கு எந்த நம்பிக்கை இருக்கும்? பணம் கிடைக்கும், உதவி கிடைக்கும், அதுக்குன்னு போவான்... இதெல்லாம் மதமாற்றம்னே ஏற்றுக்க முடியாது. மற்றபடி மதத்துக்குன்னு போறவா ரொம்ப அபூர்வம். அந்த மதத்தோட சாஸ்திரம் படிச்சுட்டு உண்மையாப் போறவா ரொம்பக் குறைச்சல். இதெல்லாம் சும்மா ஆசைக்காகப் போறது. இதை மத மாற்றம்னு பேர் சொல்றாளே தவிர உண்மையிலே மத மாற்றமே அல்ல இது!




கர்மாவைப் பற்றிச் சொன்னேன். முன் ஜன்மத்து வினைகளை அடுத்த ஜன்மத்திலே அனுபவிக்கணும்னு....

அடுத்த ஜன்மம்னு இல்லே. இந்த ஜன்மத்திலேயே அனுபவிக்கலாம். ஆயுள் இல்லேன்னா அடுத்த ஜன்மத்துக்குத் தொடரும். அடுத்த ஜன்மத்திலேயும் ஆயுள் இல்லேன்னா அதற்கு அடுத்த ஜன்மத்துக்கும் தொடரும். தர்மங்களை அனுஷ்டிக்கிறது மூலம் ஈஸ்வரனைத் தியானிக்கிறது மூலம் இந்தக் கர்மாவாலே வரக்கூடிய துன்பத்தைக் குறைக்கலாம். இது சாஸ்திரம்.

முதல் முதலா ஆத்மாவுக்கான பிறவி இருக்குமே அதற்குக் கர்மா எங்கிருந்து வந்தது?

முதல் பிறவின்றதே நாம் ஒத்துக்கறது இல்லே. உலகத்துக்கு ஆதி கிடையாது. அநாதி ஆதின்னு ஒப்புக் கொண்டா, எது முதல் பிறவி, ஏன் கஷ்டப்பட்டேன், ஏன் சுகப்பட்டேன்னு கேள்வி வரும். அதனாலே ஆத்மாவும் அநாதி; உலகத்துக்கும் ஆதி இல்லே.

மதம் எவ்வளவோ வருஷமா கொடுத்து வந்த பல வியாக்கியானங்களுக்குச் சமீப காலத்திலே விஞ்ஞான ரீதியா புதிய விளக்கம் கொடுக்கிறார்களே! நிரூபணமும் செய்கிறார்கள். இதனால் மத வியாக்யானங்கள் கற்பனை போல் ஆகிவிடவில்லையா?

எதைச் சொல்றேள்? அப்படி என்ன இருக்கு? மதமே வேறு! விஞ்ஞானமே வேறு. மதத்துக்கும் விஞ்ஞானத்துக்கும் எதுக்குத் தொடர்பு வச்சுக்கணும்? நாம் ஈச்வரனை நம்பணும். தர்மங்களைச் செய்யணும்.. நல்ல விஞ்ஞானியா இருக்கிறவன் சந்தியாவந்தனம் பண்றது இல்லேயா?

கிரஹணம் போன்றவற்றிற்கு விஞ்ஞானம் விளக்கம் கொடுத்து நிரூபிக்கிறது. மக்களுக்கு மத விளக்கம் கற்பனை போலாகி விடுகிறதே?

அது கதை. என்ன கதை என்றால் அர்த்தவாரம் என்று சாஸ்திரத்திலேயே சொல்வதுண்டு. பக்தி சிரத்தையோட கிரஹண காலத்திலே ஸ்நானம் விசேஷம். புண்யம் தரும். இது தாத்பர்யம். இதுக்காக கதை சமைச்சுச் சொல்லி இருக்கா... கதைக்கு அர்த்தம் கிடையாது.

தெய்வ நம்பிக்கைன்றது வேறே... மனித தர்மத்துடன் நடந்துக்கறது வேறென்ற மாதிரி நிறையப் பேர் நடந்துக்கறாளே... அதாவது எல்லா வித அயோக்கியத்தனத்தையும் செஞ்சுட்டு, இறைவன் கிட்டேயும், தங்களைப்போன்ற ஆச்சார்யன் கிட்டேயும் பக்தி செலுத்திட்டா செஞ்ச பாபம் போயிடும்ற மாதிரி நெனைக்கிறாளே இது சரியா?

திருடிவிட்டு ஜட்ஜ் கிட்டப் போய் நமஸ்காரம் பண்ணிட்டா ஜட்ஜ் விட்டுடுவான் என்று நினைக்கிறதுக்கு ஈடானது இதெல்லாம்.

மனசுக்கு அமைதியையும் மகிழ்ச்சியையும் அளிக்கிறதுக்குத்தானே மதமும் தெய்வ நம்பிக்கையும் இருக்கு?

நீங்க சொல்றது ரொம்பச் சரி. அதுக்காகத்தான் மதம் இருக்கு.

**அப்படியிருக்க மதத்தின் பெயராலே சண்டை, சச்சரவு, வன்முறை, கொலை எல்லாம்கூடத் தற்போது நிகழ்கிறதே. இந்தச் சூழ்நிலையிலே மதம் அவசியம்தானு?**

இதெல்லாம் இருக்கிறதுனுலேதான் இந்த அளவுக்காவது மனுஷன் சுகமா இருக்கான். இல்லேன்னு இன்னும் கஷ்டம் வந்திருக்கும். பொய்சொல்லக்கூடாதுன்னு சொல்லிண்டு இருக்கறப்பவே பொய் சொல்ரு. பொய் சொன்னுப் பரவாயில்லேன்னுட்டா கேட்கவே வேண்டாம். அது மாதிரிதான் இதுவும். வேர்வை போகறதுக்குக் குளிக்கணும். குளிச்சதும் வேர்வை வறதுன்றதுக்காகக் குளிக்காமலே இருந்துட்டா என்ன ஆகும்?

**ஆழ்ந்து நோக்கும்போது தற்போதைய சூழ்நிலையிலே பெரும்பான்மையான மக்கள் மனசுலே ஏதோவோர் சோகம் படிஞ்சு கிடக்கிறதை உணர முடிகிறது. இதற்குக் காரணம் என்ன?**

இதற்குக் காரணம் என்னன்னு மேலே இருக்கறவன் ஓர் ஆதர்ச வாழ்க்கை நடத்தினுன்னு மக்களுக்கு மனசுலே நிம்மதி இருக்கும். அப்படி இல்லாம அவரோட கெட்ட வாழ்க்கையைப் பேப்பர்லே எடுத்து எடுத்துப் போடுவான். அதைப் படிக்கிற ஜனங்களும் ஏமாற்றமடைகிருர்கள். ஆசையைக் குறைச்சுக்கணும்; மேலே இருக்கப்பட்டவர் 'என்னைப் பார்த்து மற்றவர் கத்துக்கணும். ஒரு தப்பும் நான் செய்யக் கூடாதுன்'னு நடந்துக்கணும். இது ரெண்டும் இல்லாதப்பதான் என்னத்தைச் சொல்றது...

**பிராமணர்கள் புதிதா சங்கம் அமைத்திருக்கிருர்கள். அவர்களுக்குத் தங்கள் அறிவுரை என்ன?**

என்னவோ புதுசாத் தொடங்கி இருக்கா. அதைப் பத்தி எனக்கொண்ணும் தெரியாது. இனிமே என்ன செய்யப் போருன்னு பார்க்கணும். எப்படி வாழ்ந்தா தங்கள் வாழ்க்கையைத் திருத்திக்கொள்ள முடியும்னு முதல்ல அவா சிந்திச்சு நடக்கணும். அடுத்ததா லோகத்துல சுகமா வாழறதுக்கு என்ன வேணும்னு யோசிச்சுச் செய்யணும். மத்தவா இட்டேந்து ஒதுங்காம, தாங்கள் நடத்திக் காட்டற வாழ்க்கை மூலம் மற்றவர்களும் நாமும் இது மாதிரியான நெறியான வாழ்க்கை நடத்தணும்னு நெனைக்கிற மாதிரி நடந்து காட்டணும்.

**வரதட்சிணை கொடுத்தால்தான் மணப்பேன், பெண் வேலைக்குப் போகிறவளாக இருந்தால்தான் மணப்பேன் என்று பெரும்பாலான ஆண்பிள்ளைகள் தற்போது கூறுவதால் பெண்களுக்குப் பல அநீதிகள் இழைக்கப்படுகின்றனவே!**

வரதட்சிணை கொடுத்தால்தான் கல்யாணம் பண்ணிப்பேன்னு ஒரு தப்பு இருந்தது. இப்போ இன்னொண்ணும் கூடியிருக்கு. புருஷன் சம்பாதிச்சுப் பெண்டாட்டியைக் காப்பாத்தறதுதான் தர்மம். பெண்டாட்டி சம்பாதிச்சுப் புருஷனைக் காப்பாத்தணும்றது சரியில்லே. சம்பாதிச்சா சம்பாதிக்கலாம். கட்டாயமா எதிர்பார்க்கக் கூடாது.




**சிற்றின்பம் மூலமா பேரின்பத்தை அடையலாம்னு ரஜனீஷ் சொல்ருரே அவரும் ஒரு ஹிந்துதான். அவரையும் நிறையப் பேர் பின்பற்றுகிருர்களே.**

பேரின்பம் ஒன்றுதான் உண்டு. ஒரே சுகம் அதுதான். அதோட துளிதான் லோகம் எல்லாம். அந்தச் சுகத்தை அடைந்தால் எல்லா சுகமும் அதில் அடங்கினதுதான். வேறு சுகம் இருப்பதாகச் சொல்வது ஏற்கத் தக்கதல்ல.

**மதம் மாறிய ஹரிஜனங்களுக்கு அரசு சலுகைகள் அளிப்பது சரியா? கோயில்களில் ஹரிஜனங்களை அர்ச்சகராக நியமிப்பது குறித்து தங்கள் அபிப்பிராயம்... என்று ஆரம்பித்தபோது—**

இது சம்பந்தமாக மகா சன்னிதானம் ஏற்கனவே கொடுத்த அபிப்பிராயம் பிரிண்ட் செய்யப்பட்டு உள்ளது. ஒரு நகல் தருகிேறும். வேறு கேள்விகள் வேண்டாம் என்று மகா சன்னிதானத்தின் உதவியாளர் கூறி அச்சிடப்பட்ட மகா சன்னிதானத்தின் விளக்கம் உள்ள ஒரு தாளை அளிக்கிருர். அதில் உள்ள விளக்கம்:

சாஸ்திரங்கள் ஹிந்துக்களின் மதமாற்றத்தை அங்கீகரிப்பதில்லை. இம்மாதிரி மாறினவர்கள் தங்களதுசெய்கைக்கு மனம் வருந்தினுல் அவர்கள் ஏதும் நேராதது போல் பழையபடி நடத்தப்படுவார்கள்.

கிணறுகள், ஆலயம் இவற்றை உபயோகிக்க எவருக்கும் எத்தகைய தடையும் விதிக்கக் கூடாது. தடை விதிப்போருக்குத் தண்டனை அளிக்க வேண்டும்.

மதம் மாறிப் போனதாகக் கூறப்படும் ஹரிஜனங்களுக்கு அரசு எல்லாவித விசேஷ சலுகைகளையும் ரத்து செய்யவேண்டும்.

பேட்டியை முடித்துக் கொண்டு கிளம்பும் போது ஆசீர்வதித்து அனுக்கிரகிக்கிருர். அவரது தேஜஸ் பொருந்திய ஸ்வரூபமும் ஞானம் நிரம்பிய விளக்கங்களும் முழுமையாக உள்ளத்தை ஆக்கிரமித்தபடி இருக்க விடை பெற்றேன்.

—பி. ரங்கநாயகி

புகைப்படம்: பார்த்தசாரதி

மேலட்டையில் மகா சன்னிதானமும் இளவலும். வண்ணப்படம்: உத்ரா

# உங்களைப் போன்றவர்களை திருப்தி செய்ய சார்மினாரால்தான் முடியும்




சற்றே இளைப்பாறுவீர்! ஒரு சார்மினார் புகைப்பீர்

சிகரெட் குடித்தல் உடல் நலத்திற்குத் தீங்கானது

STATUTORY WARNING: CIGARETTE SMOKING IS INJURIOUS TO HEALTH

90 பைசாவுக்கு 10

CASVS-259-203 TAM

Main Dealer: M/s SULTAN SALEEM & SONS
WARANGAL – 506 002

# பளிச்சிகள்

**சா**கித்ய அகாதமியில் எழில் முதல்வனின் பரிசு பெற்ற நூலைப் பற்றியும், ஆசிரியரைப் பற்றியும் விசாரித்தபோது, ''அடுத்த மாதம் வாருங்கள், விவரங்கள் தருகிறோம்!'' என்றார்கள். வேடிக்கையாயிருக்கிறது. பரிசு பெற்ற நூலைப் பற்றியும், ஆசிரியரைப் பற்றியும் சாகித்ய அகாதமியில் விரல் நுனியில் வைத்திருக்க மாட்டார்களோ விவரங்களை?

இந்த 43 வயதுக்காரர் தற்போது கும்பகோணம் அரசினர் ஆண்கள் கல்லூரியில் தமிழ்த் துறைத் தலைவராகப் பணியாற்றுகிறார். நவீன இலக்கியத் திறனாய்விலும் ஒப்பிலக்கியத்திலும் ஈடுபாடு கொண்ட 'எழில் முதல்வன்' இரண்டு சிறு கதைத் தொகுப்புகளுக்கும், ஒரு கவிதைத் தொகுதிக்குங்கூட ஆசிரியர். அனைத்துக் கல்லூரிகளின் தமிழ்ப் பேரவை 1963ல் இவருக்குக் 'கல்லூரிக் கவிஞர்' என்ற பட்டம் வழங்கியதாம்.

''எழில் முதல்வன் நல்ல நல்ல செய்யுள் எழுதும் தொழில் முதல்வன் ஆகின்றான் சூழ்ந்து'' என்று பாவேந்தரால் பாராட்டப்பட்டவர்.

பரிசு பெற்ற 'புதிய உரைநடை' நூலை, திருவல்லிக்கேணி தமிழ்ப் புத்தகாலயம் ஆறு ரூபாய் விலையில் வெளியிட்டுள்ளது. மீனாட்சி அம்மாளின் 'சமைத்துப் பார்' புத்தகத்திலிருந்தும், ஒவல்டின் மாத்திரை விளம்பரங்களிலிருந்தும் கூட மேற்கோள்கள் காட்டியிருக்கும் ஆசிரியர், நவீன உரைநடையில் யாரை மறந்தாலும் எஸ். ஏ. பி.யைஎப்படி மறக்கப் போயிற்று? வியப்பாயிருக்கிறது.

**சாருகேசி**



✖ வேத கோஷம்

● ஜனவரி இரண்டாம் தேதி மாலை. மயிலாப்பூர் வடக்கு மாட வீதியில் உள்ள கார்ப்பரேஷன் வங்கி மாடியில் அழகான பந்தல். மேடையில் வேத வித்தகர்களான பன்னிரண்டுபேர் சம்பிரதாயமான முறையில் மூன்று வேதங்களிலிருந்தும் பல பகுதிகளை கோஷிக்கிறார்கள். அதற்கான விளக்கங்களையும் சொல்கிறார்கள். கூட்டத்தைப்பார்த்தாலோ முக்கால்வாசிப் பேர் இளைஞர்கள்! ஆமாம்! வங்கிக்கும் வேதங்களுக்கும் என்ன சம்பந்தம்? வங்கியின் மேலாளர் கே. சீனிவாசன் சொல்கிறார்: ''ஒவ்வொரு வருடமும் புத்தாண்டின் முதல் வேலை நாளன்று வேதத்திலிருந்து ஒரு ஸ்லோகத்தைப் பாடிய பிறகுதான் வேலையை ஆரம்பிப்போம். இந்த முறை அதைச் சற்றுப் பெரிய அளவில் செய்யவிரும்பியே வேத வித்தகர்களைஅழைத்தோம்.

''இந்த மாதிரியான நிகழ்ச்சிக்கு எங்கள் வாடிக்கையாளர்கள் மத்தியில் நல்ல வரவேற்பு இருந்தது. அடுத்த வருடம் இதைவிடப் பெரிய அளவில் செய்யலாம் என்றிருக்கிறோம்!''

**—இல்லப்பா**

● உடம்புசரியில்லை என்பதுசால்ஜாப்புதான். காப்டனுக்கும் மானேஜருக்கும் அடங்கி நடக்காததால்தான் திருப்பி அனுப்பப்பட்டார் பாய்காட். மாட்ச் ஆட முடியவில்லை என்று சொல்லிவிட்டு கால்ஃப் ஆடப் போனால் எந்தக் காப்டனுக்குத்தான் கோபம் வராது?

பாய்காட் ஒரு விளையாட்டுப் பிள்ளையும் கூட. கிறிஸ்துமஸ் தினத்தன்று புதுதில்லி அசோகா ஹோட்டலில் விடுமுறையில் சென்றிருந்த வாயில் காப்போன் ஜெய்சிங்கின் சீருடையை இரவல் வாங்கி அணிந்து கொண்டு வந்து எல்லாருக்கும் ஒரு சல்யூட் அடித்தார் பாய்காட்!

கிறிஸ்துமஸ் பார்ட்டி உடனே களைகட்டி விட்டது!

நன்றி: 'ஹிந்துஸ்தான் டைம்ஸ்'



✖ பாய்காட்



✖ எழில் முதல்வன்

### சென்ற வாரம்...

தந்தை இறந்து விட சந்தியாவும் அவள் அத்தை ஜகதாவும் ஒருவருக்கொருவர் ஆதரவாக இருந்து வருகிறார்கள். சந்தியா பள்ளி ஆசிரியையாக வேலை பார்த்து வருகிறாள். அவர்கள் வசிக்கும் பெரிய வீடும் சுற்றிலும் விசாலமான தோட்டமும் சந்தியாவின் சொத்து. அதை விலைக்கு வாங்க வருகிறார் ஒரு செல்வந்தர். அப்பாவின் நினைவாக உள்ள வீட்டையும் தோட்டத்தையும் விற்க மனமில்லாத சந்தியா, அவரிடம் நறுக்குத் தெறித்தாற்போல் பேசி அனுப்பி விடுகிறாள்.

அத்தை ஜகதா, ''வீட்டை விற்காமல் உனக்கு எப்படி அம்மா கல்யாணம் செய்ய முடியும்?'' என்று கேட்கிறாள். ''எனக்கு ஒரு துணை வேணும் என்கிற சுயநலத்தோடு உங்களை அநாதையா விட்டுடுவேனா அத்தை?'' என்று கேட்கும் சந்தியா, ஜகதாவை அணைத்துக் கொண்டு, ''இந்த வீடும் நானும் இல்லேன்னா வயசுக் காலத்திலே நீங்க எங்கே போவீங்க அத்தை?'' என்று அழுகையில் குலுங்க, ஜகதாவும் ''தெரியலேம்மா'' என்று துயரம் தாங்காது விசும்புகிறாள்...

## 2

அத்தை ஜெகதா கொண்டு வந்து வைத்த டிபன் சம்புடத்தை எடுத்துக் கொண்டு தோள் பையுடன் தயாராக நின்ற சந்தியா ''வரேன் அத்தை! கதவைத் தான் போட்டுக்கோங்க,'' குரல் கொடுத்துவிட்டு அவசரமாகச் செருப்புக்களைக் காலில் திணித்துக் கொண்டு ஓட்டமும் நடையுமாக பஸ் நிலையத்துக்கு விரைந்தாள். காலை அவள் பிடிக்க வேண்டிய பஸ் அங்கு நில்லாமலே புழுதியைக் கிளப்பிக்கொண்டு பறந்துவிட்டது. வீட்டுக்கு வெகு அருகில்தான் நெடுஞ்சாலையும் அந்த பஸ் நிலையமும் இருந்தன. திருச்சியிலிருந்து சேலம் செல்லும் பஸ்கள்... அந்தநிலையத்தில் பயணிகளைக் கண்டால் நிற்கும், சாதாரணமாகக் காலை வேளைகளில் நாலு இரும்புக் கம்பிகள் மேல் சாய்ந்தபடி நின்ற தகரக் கூரை வேய்ந்த நிலையத்திலிருந்த இரண்டு சிமெண்ட் பெஞ்சுகள் மீதும் மாடு மேய்க்கும் பையன்கள் தான் முழுதும் ஆனந்தமாகப் படுத்துத் தூங்குவது வழக்கம். பக்கத்து ஊரில் சந்தை நடைபெறும் செவ்வாய்க் கிழமைகளில்தான் நிலையத்தில் மனிதப் புழக்கம் தெரியும். திருச்சியில் கிளம்பி ஊர் ஊராக நின்று அலுத்துச் சலித்துப் போன டிரைவரும் கண்டக்டரும் அடுத்தபடியான பெரிய டவுன் மூதலூரில்தான் அரை மணி நேரம் சாவகாசமாக வண்டியை நிறுத்துவார்கள். கிராம வாழ்க்கையில் இப்படியெல்லாம் சில வசதிக் குறைவான சங்கதிகள் உண்டு. குறித்த நேரத்தில் அவள் நின்றுகொண்டு கை அசைத்திருந்தால் வாத்யார் அம்மா பாவம் என்று பஸ் ஓட்டுனர் கட்டாயம் நிறுத்தியிருப்பார். அன்று நேரம் கழித்து எழுந்தது தான் அதற்குக் காரணம். இரவு முழுவது தூங்காது தலைவலியுடன் பாடுபட்டு...ம். அந்தத் தலைவலி நின்று இப்போது மன வலியுடன்



# சாதாரண மனிதன்

'லக்ஷ்மி'

அவள் புறப்பட்டிருந்தாள். அவள் பஸ்ஸைத் தவற விட்டதற்குக் காரணமே முதல் நாள் காலை அவர்கள் வீட்டில் நடந்த குழப்பம்தான். ஆனால் பள்ளிக்கூடத் தலைவி அதை ஒப்புக் கொள்ள மாட்டார்களே.

நிலையத்தின் அருகில் நின்ற சுமைதாங்கி மீது சாய்ந்தபடி சாலையைக் கவலையுடன் எட்டிப் பார்த்துக் கொண்டு நின்றாள். பூதஊர் போகும் வண்டியை அந்தத் திசையிலேயே காணவில்லை. ஒவ்வொரு நிமிஷமும் யுகமாகக் கனக்கக் கவலை தாள முடியாது எட்டிப் பார்த்துக் கழுத்து வலிக்க நின்றாள். பன்னிரண்டு கிலோ மீட்டர் தொலைவிலிருந்த அடுத்த பெரிய டவுனான பூதஊரில் மங்கையர்க்கரசி மேல் உயர்நிலைப் பள்ளியில் தான் அவள் ஆசிரியையாக வேலை பார்த்துக்கொண்டிருந்தாள்.

பள்ளிக்கூடம் ஆரம்பிக்கு முன்னர் ஒவ்வொரு திங்கள் கிழமை காலையும் ஆசிரியைகள் அனைவரும் பள்ளித் தலைவியை அவளது அறையில் சந்திக்க வேண்











காதலர் விடை.

1. முத்துராமன் - லட்சுமி (அச்சாணி)
2. முத்துராமன் - வாணிஸ்ரீ (தாலியா சலங்கையா)
3. சிவகுமார் - புஷ்பலதா (புதுவெள்ளம்)
4. ஜெய்கணேஷ் - லதா (ஞானக்குழந்தை)

---

டும். ஒரு சில நிமிஷங்கள்தான் அந்தச் சந்திப்பு நேரம் என்றாலும் அத்தனை பேருக்கும் முள் மேல் நிற்பது போன்றதொரு உபத்திரவமான அனுபவம். முகத்தில் கடுமை தெறிக்க, வார்த்தைகளில் காரம் தொனிக்க — படபடவென்று தன் ஆலோசனைகளைக் கொட்டும் தலைவிக்கு முன் வாயைத் திறக்க அஞ்சி அனைவரும்மௌனமாகப் பொம்மைகளாக அமர்ந்திருப்பது வழக்கம். அந்தச் சந்திப்புக்குப் பின் திடீரென்று பெயர் சொல்லி ஒரு ஆசிரியையை மட்டும் இருக்கச் சொல்லிவிட்டு மற்றவர்களைத் தலைவி அனுப்பினால், கட்டாயம் ஏதோ விபரீதம் நடந்து விட்டிருக்கிறது என்று எல்லோரும் புரிந்து கொண்டு விடுவார்கள். சிறிதுபொழுது பள்ளிக்கூடத்தின் பொது மண்டபத்தில் வகுப்புகள் துவங்கு முன் மாணவிகள் ஒன்றுகூடிப் பிரார்த்தனை கீதம் பாட ஆரம்பிக்கும்போது வந்து கலந்துகொள்ளும் அந்த ஆசிரியையின் முகத்தைப் பார்த்ததுமே மற்ற எல்லோரும் தெரிந்துகொண்டு விடுவார்கள்.

தலைவி சரியான மண்டகப்படி செய்திருக்கிறாள் என்கிற கிசுகிசு பள்ளிக்கூடம் முழுவதும் விநாடியில் பரவிவிடுவது வழக்கம்.

அன்று சந்தியாவின் உள் உணர்வு அவளை தீவிரமாகவே எச்சரித்து விட்டிருந்தது.

அந்தத் திங்கட் கிழமை அவள் தலைவியிடம் வசமாகவே மாட்டிக் கொள்ளப் போகிறாள்.

பஸ்ஸைத் தவறவிட்டுத் தாமதமாகவந்தது முதல் குற்றமாக அமையப் போகிறது.

கலவரத்துடன் முகத்திலே பொடித்த வியர்வையைத் துடைத்துக் கொண்டு கழுத்தை நீட்டி எதிர்புறத்துச் சாலையைப் பார்த்தாள். நல்லவேளை கொஞ்ச தூரத்தில் ஒரு பஸ் வருவது தெரிந்தது. பயணிகளை அடைத்துக் கொண்டு இரண்டு பக்கமும் மாறி மாறிச் சாய்ந்தபடி விரைந்து வந்த அந்த பஸ் அவளைத் தாண்டி விடுமுன் கையைக் காட்டி அவள் ஸ்டாப்... ஸ்டாப் என்று பலமாகக் கூச்சலிட்டாள்.

முதல் நாள் நன்றாகச் சோப்புப் போட்டுத் துவைத்துக் கஞ்சி போட்டு, தானே இஸ்திரி போட்டு மடித்து வைத்திருந்த மல்மல் சேலையைத்தான் வேலைக்குக் கட்டிக் கொண்டு கிளம்பி யிருந்தாள்.

புஸ்ஸென்று உடலைத்தழுவிக்கொண்டிருந்த சேலை அந்தக் கூட்டத்துக்குள் நசுங்கி... மடிப்புக் குலைந்து... படாத பாடு பட்டு விட்டது. பூதலூர் நிலையத்தில் இறங்கியதும் கசங்கிப்போன சேலையை இழுத்துச் சீராக்கிக் கொண்டு, .நெற்றி மீது பறந்து விழுந்த முடியை ஒதுக்கிக்கொண்டு ஒரே மூச்சாகப் பள்ளிக்கூடத்தை நோக்கி விரைந்தாள். அதற்குள் தலைவி தனது அறையில் மற்ற ஆசிரியைகளுடன் பேசிக் கொண்டிருந்தாள்.

''மன்னிக்கவும்'' — பரபரப்புடன் உள்ளே நுழைந்த சந்தியாவை அனைவரும் அதிசயமாகப் பார்த்தனர்.

'ஏன் இத்தனை நேரம்?' தலைவி கேட்கவில்லை. மூக்குக் கண்ணாடி வழியே முறைத்த பார்வை அவளை வெட்டியது. வெட்கத்தில் குன்றிப்போனாள் சந்தியா. நெஞ்சு படபடக்க — மூச்சுத் திணற — காலியாக இருந்த ஒரு நாற்காலியில் மெல்ல அமர்ந்து கொண்டாள்.

வழக்கம்போலத் தலைவி பொதுப்படையாக பள்ளி நிர்வாகத்தைப் பற்றிப் பல குற்றச் சாட்டுகள் -- குறைகளைக் கொட்டிவிட்டு. தனது அற்புதமான யோசனைகளை உதிர்த்து விட்டு சந்தியாவின் பக்கம் திரும்பினாள்.

''மிஸ் சந்தியா... உன்னோடு கொஞ்சம் தனியாப் பேசணும்...'' தலைவிசொன்னதும் மற்றவர்கள் எழுந்து அறையை விட்டு மாயமாகினர்.

சந்தியா முகம் சிவந்து, நெஞ்சு பதறிப் போனாள்.

'ஏன் நேரம் கழித்து வந்தாய்?' என்று முதலில் கேட்கப் போகிறாள். இன்னும் அவள் மேல் வேறு என்ன குற்றம்?

அப்பாவின் மறைவுக்குப் பின் அனாதையாகிவிட்ட தன்னையும் அத்தையையும் காத்துக்கொள்ள அவளுக்கு அந்த வேலை மிகவும் அவசியமானதாக இருந்தது. 'இந்தா பிடி. ராஜிநாமா' என்று கௌரவத்தைப் பாராட்டிக்கொண்டு கால் கடுதாசியை நீட்டிவிட்டு வீட்டோடு தங்கிவிட முடியாத பொருளாதாரம்.

அவள் சம்பளம், அத்தையின் ஜீவனாம்சத் தொகையில் கிடைக்கும் கொஞ்ச வட்டி. தோட்டத்தில் பயிரிடுபவைகளைச் சந்தையிலும் பூதலூர்க் காய்கறி மார்க்கட்டுக் காரர் ஒருவரிடமும் விற்று வருகிற சொற்பத் தொகையும் சேர்ந்து அவர்கள் இருவரும்

# ஆன்றோர் வாக்கு...



● எப்போது பார்த்தாலும் காரியம் செய்து கொண்டிருப்பதே நமக்கு இயல்பாகி விட்டது. உடம்பால் காரியம் செய்யாதபோதும் வாக்கால் பேசிக் காரியம் செய்யாதபோதும் கூட நம் மனசு சதா எதையாவது நினைத்துக் கொண்டே இருக்கிறது. இதுவும் காரியம் தான். இந்தக் காரியம் நின்றால்தான் அதாவது மனசில் எண்ணமே தோன்றாமல் இருந்தால்தான் எந்தக்காரியமும் இல்லாத பிரம்ம நிலையை அடைய முடியும். ஆனால் இந்த மனசால் ஒரு க்ஷணம் கூட எதையும் நினைக்காமல் இருக்க முடியவில்லையே! இதை எப்படி நிறுத்தப் பழக்குவது?

இந்தப் பழக்கத்துக்கு வழிதான் பக்தி.

—ஜகத்குரு ஸ்ரீ காஞ்சி காமகோடிசந்திர சேகரேந்திர சரஸ்வதி சங்கராச்சாரிய சுவாமிகள்

● பொய்ம்மை இரட்டுற மொழிதல், நய வஞ்சனை நடிப்பு இவற்றால் பொருளீட்டிப் பிழைத்தல் நாய்ப் பிழைப்பென்று கொள்வேன்.

—பாரதியார்

● ஒரு பெண்ணின் இளகிய மிருதுத் தன்மையைத் தன்னுள் ஆண் காட்டினால் அவன் மகாத்மா ஆகிறான். ஆனால் அதே நேரம் தன்னுள் இருக்கும் ஆண் தன்மையை ஒரு பெண் வெளிக்காட்டினால் அவள் கொடூரமானவளாகச் சித்திரிக்கப்படுகிறாள்.

—முன்ஷி பிரேம்சந்த்

□ இசை என்ற ஒரு கலையைக் கையாளும் போதுதான் யாருமே அற்பத்தனத்தையும் வெறுப்பையும் வெளிப்படுத்த முடியாது!

—ஜான் எர்ஸ்கின்

தேவை தெரியாது வாழ முடிந்தது. ஒரு சிறு தொகையை வருங்காலத்துக்குச் சேமித்து வைக்கவும் முடிந்தது.

வேலை தேவையில்லை என்று தலைவியிடம் முறைத்துக் கொண்டு அவள் வெளியேற முடியாது. அப்பா சிரமப்பட்டு அவளுக்கு வாங்கித் தந்த அந்த வேலை போய்விட்டால் பிறகு?

பிசாசுக்கு வாழ்க்கைப்பட்டால் புளிய மரத்தில் ஏறித்தான் ஆக வேண்டும், அது போல இந்தப் பள்ளிக்கூடத்தில் அந்தத் தலைவியிடம் வந்து அகப்பட்டுக் கொண்டு விட்டாள் — வாயைத் திறந்து எதிர்த்துப் பேசக் கட்டுபடியாகாதே.

தலைவி நாற்காலியில் கால் மேல் கால் போட்டுக் கொண்டு உட்கார்ந்தபடி அவளை வெறித்துப் பார்த்தாள்.

''பஸ் தவறிவிட்டது அதனாலே காலை மீட்டிங்குக்கு லேட்டுன்னு கதை தேவையில்லே. பஸ்ஸைத் தவற விடக் கூடாது. தொலை தூரத்தில் இருக்கிறவங்க சீக்கிரமே வீட்டை விட்டுக் கிளம்பிடணும். நான் அதைப் பத்திப் பேச உன்னை நிறுத்தி வைக்கவில்லே. பொதுப் பிரார்த்தனை நேரம் நெருங்கி விட்டது. சுருக்கமாகக் கேக்கறேன். உன் வகுப்பிலே ராதிகான்னு ஒரு பெண் இருக்காள் இல்லையா?''

உயரமா — கொஞ்சம் சிவப்பு — சுருண்ட முடியும் துருதுரு கண்களுமாக இருந்த ராதிகாவை அவளுக்கு நன்றாகவே தெரியும். பின் வரிசையில் உட்கார்ந்து பாடப் புத்தகத்துக்குள் கதைப் புத்தகத்தை வைத்துப் படிப்பவள். சினிமாவிலே அதிக நாட்டம் உடையவள். அடிக்கடி வகுப்புக்கு மட்டம் போட்டுவிடுவாள். பூதலூரில் வசிப்பவள். பெற்றோர்கள் சென்னையில் இருந்தார்கள். பாட்டன் ஆதரவில் அங்கே தங்கி பள்ளியில் படித்துக் கொண்டிருந்தாள். இத்தனை விவரம் அவளைப் பற்றி சந்தியாவுக்குத் தெரியும்.

''சில நாட்களாக நான் அந்த ராதிகாவை சஞ்சீவி கல்லூரி வாசலில் இருக்கிற பெரிய ஆலமரத்துக்கிட்ட ஒரு பையனோடே பார்க்கிறேன். காலை—மாலை இரண்டு வேளை அவனோடு சிரித்துக் கொண்டு பேசுவதைக் கவனிக்கிறேன். அதைப் பற்றி விவரம் உனக்கு ஏதாவது தெரியுமா?... நீ அவளை இதுக்காக ஏதாவது கண்டிச்சிருக்கியா?—''

அதட்டலாக வினவினாள்.

'பள்ளிக்கூடத்துக்குள்ளேயே மாணவிகளிடம் கண்டிப்பாக இருக்க முடியாத காலம் இது. வெளியில் அவர்களது தனிப்பட்ட வாழ்க்கையில் தலையிட்டால் பெரிய வம்பாகி விடும்....' — சொல்லத் துடித்தாள் அவள். பேசப் பயந்து தலையை அசைத்தாள்.

''நல்ல அறிவுள்ள — பண்பான — ஒழுக்கமுள்ள பெண்களை உருவாக்க வேண்டியது ஆசிரியைகளான நமது கடமை இல்லையா?''

சோடா பாட்டில் கண்ணாடி வழியே உறுத்துப் பார்த்தாள் தலைவி.

கடமைதான் ஆனால் அதை வெற்றியோடு செய்து முடிக்க எத்தனை இடர்கள் வெளி உலகிலே இருக்கின்றன என்பது உங்களுக்குத் தெரியாதா? கிளுகிளுப்பூட்டும் கதைகள் நிறைந்த புத்தகங்கள், சினிமாக்கள் இன்னும் எத்தனையோ மாணவிகளின் திசையைத் திருப்பக் காளான்களாக உருவாகிக் கொண்டிருக்கும்போது ஒருசில பெண்களான நாம் ஓங்கிக் கத்தி என்ன பயன்? நமது குரல் அவைகள் மத்தியில் அடங்கிப்போகும். பிளஸ் டூ படிக்கும் மாணவிகள் எத்தனை பேர் சினிமாவில் கதாநாயகியாக நடிக்க விரும்புகிறார்கள் என்ற புள்ளி விவரம் உங்களுக்குத் தெரியுமா? 'காதலிக்க நேரமில்லை — காதலித்தும் பயனில்லை. படியுங்கள் குழந்தைகளா' என்று பஜனை செய்தால் பத்தாம் பசலிகள் என்ற பட்டம்தான் கிடைக்கும். மாணவிகளின் சொந்த விஷயங்களில் தலை




## அழகிப் பெண்ணே! ஆலவாளே!

● வித்தியாசமான தலைப்பு! ஆழமான கரு: சரளமான நடை: நெஞ்சை விட்டு நீங்காத கதா பாத்திரங்கள். இவற்றுடன் உமாபதியின் சிறப்பான படங்கள் வேறு. மொத்தத்தில் 'சூப்பர் ஹிட்'டான நாவலை வாசகர்களுக்காக விருந்து படைத்திருக்கிறார் விமலா ரமணி.
மருதூர் வி. சுவாமிநாதன்

● முடிவில் செல்லியைக் கொலை செய்தது மன்னிக்க முடியாதது. ஞானு கேரக்டர் அருமை. பதின்மூன்று வாரங்களில் முடித்தாலும் ஒரு நல்ல கதை படித்த திருப்தி இருந்தது.
பழவந்தாங்கல் ஆனைக்கூத்தன்

● அத்தனை பாத்திரங்களும் ஏதோ அறிமுகமானவர்கள் போல் வாழ்வில் ரொம்ப நாளைக்கு மனத்தில் இருந்து கொண்டே இருப்பார்கள். குருக்கள் இல்லாத கோயிலுக்கு வரும் அந்தச் சின்னஞ் சிறு வயதினனை பாலசுப்பிரமணியம் கூடத்தான்!
இடையபாளையம் பூ. பெருமான்சாமி

● விமலா ரமணியின் பாத்திரப் படைப்புகளான செல்லி, நாயர், நெஞ்சில் நீங்கா இடம் பெற்று விட்டனர்.
மாதேமங்கலம் வெ. கோபால்

● தான் நேசித்த ஒருவனுக்காகத் தன்னையே தியாகம் செய்துவிட்ட செல்லியின் முடிவு என் கண்களில் நீரை வரவழைத்தது. 'தாழ்ந்தவள்' என்று ஒதுக்கி வைக்கப்பட்டாலும் மனசில் உயர்ந்தவர்கள் அவர்களிலும் இருக்கிறார்கள் என்பதைச் செல்லியின் பாத்திரம் நிருபித்தது.
திருவரங்கம் எம். உஷா

● சாதி மத சாக்காட்டினை கருவறுக்க ஆர்த்தெழும் ஓர் அருமையான கதா பாத்திரம் நாயர், செல்லி—அந்தக் கதாபாத்திரத்தின் துயர முடிவு ஞானுவை மட்டுமல்ல நம்மையும்தான் பிதற்ற வைக்கிறது! நம் நெஞ்சங்களில் எழும் ஏக்கத்தின் ஒலிகள் ஒவ்வொன்றும் விமலா ரமணிக்குக் கிடைத்த வெற்றிச் சங்கமே!
வீரபாண்டி வடிலை அன்புச்செல்வன்

---

விட்டுக் குழப்ப ஆசிரியைகளுக்கு எவ்வளவு தூரம் அதிகாரம் இருக்கிறது என்பது முதலில் தெரிய வேண்டும்....

காதலிப்பது என்பது அவரவரது சொந்தப் பிரச்னை. ராதிகாவைப் பற்றி அவளது பாட்டனுக்கு இல்லா அக்கறை நமக்கு என்?...

படபடவென்று பேச ஆசைப்பட்டான். ஆனால் மௌனமாகத் தலையைக் குனிந்தபடி நின்றான்.

''மிஸ் சந்தியா... கேட்பதற்கு ஒன்னுமே சொல்லாட்டா பிரச்னைக்கு முடிவு காண முடியாது. அந்தப் பெண் ராதிகாவைக் கூப்பிட்டுக் கொஞ்சம் புத்தி சொல்லி வை. மிஞ்சினா மிரட்டி வை. அடுத்த திங்கள் காலை உரிய நேரத்தில் பஸ் பிடித்து மீட்டிங்குக்குக் குறித்த நேரத்துக்கு வந்துவிடு. இதுவே நீ தாமதமாக வரது முதலும் கடைசியுமாக இருக்கட்டும்.''

தலையை ஆட்டிவிட்டு அவள் மௌனமாக வெட்கத்தையும் துக்கத்தையும் அடக்கிக் கொண்டு பிரார்த்தனைக் கூட்டத்திலே கலந்து கொண்டாள்.

மங்கையர்க்கரசி மேல்நிலைப் பெண்கள் பள்ளியில் அவள் பத்தாவது வகுப்பில் ஆசிரியை. வகுப்பு ஆரம்பத்தில் முதலாவது அவள் மாணவிகளுக்கு ஆங்கிலப் பாடம் எடுக்க வேண்டும்.

வகுப்புக்குள் நுழைந்தபோது முதலில் அவள் கண்ணில் பட்டவள் அந்த ராதிகா தான்.

எரிச்சல் பற்றிக் கொண்டு வந்தது அவளுக்கு. இரவு முழுவதும் சரியாகத் தூங்காததின் சோர்வுதான் அவள் நேரம் கழித்து எழுந்ததன் காரணம். பஸ்ஸை அதனால்தான் தவற விட்டிருந்தாள். அன்று அவளுக்குத் தலைமை ஆசிரியை அளித்த சூடான வரவேற்புக்கு ஒட்டுமொத்தமாகக் காரண மானவள் அவள் அருமை அத்தான் குமரேசன்.

சனி, ஞாயிறு இரு தினங்களிலும் சந்தியா அத்தைக்கு உதவியாக வீட்டு வேலைகளைப் பொறுப்புடன் கவனிப்பது வழக்கம். சனிக்கிழமை மாலை முழுவதும் அத்தை தாற்காலிகமாக அமர்த்தியிருந்த தோட்டக்காரனுடன் செடிகளுக்கும் மற்றப் பயிர்களுக்கும் உரம் போடுவதிலும் தண்ணீர் பாய்ச்சுவதிலும் கவனமாகத் தோட்டத்தைச் சுற்றி வந்து களைத்துப்போய்விட்டிருந்தாள்.

அதனால் மறுநாள் காலை வீட்டு வேலை அனைத்தையும் தானே செய்துவிட்டு அத்

தைக்கு ஓய்வு தருவது என்ற பலத்த தீர்மானத்துடன்தான் பரபரப்பாக அவள் சமையலறையில் காரியங்களைக் கவனித்துக் கொண்டிருந்தாள்.

அத்தை ஸ்நானத்தை முடித்துக் கொண்டு ஈரக் கூந்தலைக் காயவைத்தபடி முற்றத்துக் குறட்டில் உட்கார்ந்து கொண்டு நமச்சிவாய பதிகத்தை உரத்துப் படித்துக் கொண்டிருந்தாள். பின்னர்தான் காப்பி பலகாரம் சாப்பிடுவதாக உத்தேசம்.

அதுசமயம் வாயிலில் புழுதியைப் பரப்பிக் கொண்டு வந்து நின்ற பெரிய படகுக் காரை அவள் கவனிக்கவில்லை.

ஈரக் கைகளைத் துண்டில் துடைத்துக் கொண்டு வெளியே ஓடிவந்த சந்தியா திடுக்கிட்டுப் போனாள்.




அவளது அக்கா சூரியா தன் கணவன் குமரேசனோடு தனது இந்து குழந்தைகளை ஊரான் வீட்டுக் காரில் அழைத்துக்கொண்டு விடிந்ததும் விடியாததுமாய்த் திருச்சியிலிருந்து புறப்பட்டு வந்திருக்கிறாள்.

அவள் அத்தான் குமரேசனுக்குத் திருச்சி நகரிலே ஒரு பெரிய மோட்டார் ரிப்பேர் தொழிற் கூடம் இருந்தது. நகரிலும் வெளிப்புறத்திலும் உள்ள பெரிய மனிதர்கள் நிறையப் பணம் போட்டு வாங்கிய தமது ஃபாரின் கார்களை அவரது தொழிற்கூடத்தில் தான் பழுதுபார்க்க அனுப்புவது வழக்கம்.

கட்டினவனுக்கு ஒரே ஒரு வீடுதான் சொந்தம். கட்டாதவனுக்குக் குடியிருக்கும் அத்தனை வீடுகளும் அந்தச் சமயத்துக்குச் சொந்தம் என்பது போலப் பழுது பார்க்க வரும் கப்பல் கார்களில் ஒன்றை எடுத்துக் கொண்டு அவர் தம் பரிவாரங்களுடன் அப்போதைக்கப்போது அங்கு வந்துவிடுவார்.

காலையில் வந்தால் சூரியா வேலில் திரும்ப மாட்டாள். அவளையும் சிகரெட்டைச் சங்கிலித் தொடராகப் பிடித்து வீட்டையே நாற்றமடிக்க வைக்கும் அவளது கணவரையும் அவர்களது இரட்டை வால் குழந்தைகளையும் சமாளித்து அனுப்புவதற்குள் சந்தியாவுக்குப் போதும் என்றாகிவிடும்.

இந்த முறை குமரேசன் உள்ளே புயலாக வந்து நுழைந்தபோதே அவள் புரிந்து கொண்டாள்.

நமச்சிவாய பதிகத்தைப் பாதியிலேயே திருச்சிற்றம்பலம் என்று முடித்துப் புள்ளி வைத்துவிட்டு அத்தை வியப்புடன் எழுந்து நின்றாள்.

**"டீ**ச்சர்....!'' கூப்பிட்ட குரல் கேட்டு விழித்துக் கொண்டாள் சந்தியா.

''தலையைச் சுத்திட்டு மயக்கமா வருது டீச்சர்.. குடிக்கக் கொஞ்சம் தண்ணி வேணும்.'' —ராதிகா கேட்டதும் திகைப்புடன் பின் வரிசையில் பவ்யமாக நின்று கொண்டிருந்த அந்தப் பெண்ணிடம் ஓடி அவளைத் தாங்குவதற்குள் அவள் அப்படியே சரிந்து தரையில் சுருண்டுமயக்கமாக விழுந்து விட்டாள். அவ்வளவுதான் அங்கே ஒரே கூச்சல் குழப்பம்.

சில பெண்களின் உதவியுடன் மயங்கிக் கிடந்த ராதிகாவைத்தூக்கிச்சென்று அடுத்த அறையிலிருந்த பெஞ்சியில் கிடத்தினாள். ''சத்தம் போடாமல் எல்லாரும் வகுப்பில் உட்காருங்கள்'' மற்ற மாணவிகளுக்கு உத்தரவிட்டாள். ஒரு மாணவியை அழைத்துத் தலைவிக்குத் தகவல் தெரிவிக்கச் சொன்னாள். பள்ளிக்கூடத்தும் பியூனை அழைத்து அருகில் உள்ள இருபத்து நாலு மணி கிளினிக்கிலிருந்து யாராவது ஒரு டாக்டரை உடனடியாக அழைத்து வரச்சொன்னாள். ஒரு டம்ளரில் தண்ணீரை நிறைத்து எடுத்துக்கொண்டு சென்று மயங்கிக் கிடந்தவள் முகத்திலே சிறிதளவு தெளித்தாள். பின்னர் அவளை மெல்லத் தன் மார்பின் மீது சாத்திக் கொண்டு தம்ளரிலிருந்து கொஞ்சம் தண்ணீரைப் புகட்ட முயன்றபோது அருகில் நிழலாடுவதை உணர்ந்து நிமிர்ந்தாள்.

ஓங்கி உயரமாக வாயிற்படியைத் தொட்டுக்கொண்டு நின்ற அவனை அவள் அதற்கு முன் பார்த்ததில்லை.

ஆனாலும் ஆண்டாண்டு காலம் பார்த்துப் பழகியவன்போல் அவனது புன்னகையில் உள்ளம் பரவசமடைவதை உணர்ந்து திடுக்கிட்டுப் போனாள்.

''என்ன ஆச்சு?'' கேட்டுக் கொண்டே வெள்ளை சபாரி சூட்டில்கம்பீரமாகத் தெரிந்த அவன் உள்ளே வந்து மருந்துப் பெட்டியைப் பெஞ்சியின் ஓரத்தில் வைத்துவிட்டு ஸ்டெதஸ் கோப்பைக் கையில் எடுத்தான். அதற்குள் தலைவி பரபரப்புடன் ஓடிவந்தாள்.

''இந்த மாணவி திடீரென்று மயங்கி விழுந்துட்டா....'' தலைவியைப் பார்த்து அச்சம், அவனைப் பார்த்து இனம் விளங்காத ஒரு பரவச உணர்வு ... தன் பார்வையை மீண்டும் ராதிகாவின் பக்கம் திருப்பினாள்.

(தொடரும்)




● பத்துக் கட்சிகளைச் சிறந்த முறையில் ஒரு அலசல் அலசிய நமது நிருபருக்கு நல்ல படி திருஷ்டி சுத்திப் போடுங்கள் ஸார்! (ஆமாம், யார் அந்த 'நமது நிருபர்'? வெகு அருமையாகத் தமிழ் நாட்டு அரசியலைக் கணித்திருக்கிறாரே!) இப்பகுதியைத் தயவு செய்து தொடரவும்.
சென்னை-35 சி. பூபால் சிங்

● திரு மீ. ப. சோமு அவர்கள் எழுதிவந்த 'ரசிகமணி ரசித்த மணிகள்' இலக்கியக் கட்டுரை இவ்வளவு விரைவில் முடிந்துவிடும் என்று நான் நினைத்துக்கூடப் பார்க்கவில்லை. ஒவ்வொரு வாரமும் ஒவ்வொரு தேன் துளியாகச் சுவைத்தேன். இக்கட்டுரை மூலம் அவரைப் பற்றி, அவருடன் பழகிய பலரைப் பற்றி எவ்வளவோ தெரிந்துகொண்டேன்.
செலக்கரிச்சல் எஸ். முத்து

தந்தி:
● Plead Kadugu to continue pathilgal We (Readers) will convince Mrs Kadugu.
சென்னை-6 ராமாபுரம் சந்துரு

● கடுகின் பதிலைத் திருமதி கடுகினாலேயே தாங்க முடியவில்லையென்றால் வாசகர்கள் நாங்கள் எம்மாத்திரம்? திருமதி கடுகிற்கு இதயபூர்வமான நன்றியை உரித்தாக்கிக் கொள்கிறோம்.
மேட்டுப்பாளையம் மு. கல்யாணசுந்தரம்

● எப்போதுமே சரித்திரக் கதைகளுக்கென தனி இடம் கொடுத்துச் சிறந்து விளங்கும் கல்கியில் ஸ்ரீவேணுகோபாலன் 'சுவர்ணமுகி' என்ற மாணிக்கக் கல்லை அழுத்தமாகப் பதித்து விட்டார். எவ்வளவு எளிய தமிழ்ச் சொற்கள்! வீரமும் காதலும் சொட்டும் கவிதை நடை!
இராஜபாளையம் பொன். இளங்கோவன்

● 'ரூபா' கதையை ஆரம்பம் முதற் கொண்டே விறுவிறுப்பாகக் கொண்டுசென்ற 'அன்பிற்கினியவன்' முடிவை இப்படி உப்புச் சப்பின்றிச் செய்துவிட்டாரே! இறுதியில் துப்புக்களை வெளியிடும் விதம் சுவையாக இல்லை. ஒரு குறுநாவலைத் தொடர் கதையாக வெளியிட்டுள்ள உங்கள் திறமை பாராட்டுக்குரியது தான்.
சென்னை-56 பூவை. விமலன்

● 'ரூபா' மினி-தொடர்கதையாக இருந்தாலும் அப்பப்பா! ஒரு 'மணி'யான தொடர் கதையாக இருந்தது.
மதுரை-20 பி. ராஜசேகரன்

● பேட்டி என்ற முறையில் சபரி மலை பற்றி வெளியிட்டுள்ளது எரிமலையாக விரைவில் வெடிக்கத்தான் போகிறது, பாருங்களேன்.
வியாசர் காலனி திருமதி நாராயண ராவ்

● 10—1—82 கல்கி, தபால் தலை கண்காட்சி பற்றிய கட்டுரையில் உள்ள ஒரு தவற்றைத் திருத்த விரும்புகிறேன். பொதுமக்கள் அனைவரும் பயன்படுத்தும் விதத்தில்தான் காந்திஜி தபால் தலைகள் 1948ல் வெளியிடப்பட்டன.

அப்போது கவர்னர் ஜெனரலாக இருந்த ராஜாஜி அரசுப் பணிக்காக இந்த ஸ்டாம்பு களை உபயோகிக்க விரும்பினார். பொது ஸ்டாம்புகளிலிருந்து வேறுபாடு செய்ய Service என்று மேல் முத்திரை யிடப்பட்டு (Over print) ராஜாஜிக்கு வழங்கப்பட்டது. அவ்வாறு மேல் முத்திரையிடப்பட்ட ஒவ்வொரு தபால் தலையின் மதிப்பும் இன்று பல்லாயிரம் ரூபாயாகும். கண்காட்சியில் இந்த Service தபால் தலைகள் வைக்கப் படவில்லை. சாதாரண ரூ. 10 பெறுமானமுள்ள தபால் தலைகளையே காட்சிக்கு வைத்திருந்தார்கள்.
பூவிருந்தவல்லி வெ. அசோகன்

● அண்மையில் 'மீலாத் நபி' பண்டிகையை ஒட்டிச் சென்னையில் நடைபெற்ற பிரும்மாண்டமான ஊர்வலம் கண்டேன்.

மிகவும் உணர்ச்சி வயப்பட்ட நிலையில் சென்று கொண்டிருந்த அந்த அருமையான ஊர்வலம் என்னை ஒரு கணம் இந்து-முஸ்லிம் என்கிற பேதங்களை விடுத்து அவர்களோடு ஒருவனாய் — 'லா இலாஹி இல்லல்லா... முஹம்மது ரஸூலுல்லா' என்று கோஷமிடச் செய்தது.

ஊர்வலத்தினர் கையில் பிடித்துச் சென்று கொண்டிருந்த அட்டைகளில் ஒன்றில் காணப்பட்ட வாசகம்:

''மதுபானமும் சூதாட்டமும் அல்லாவை மறக்கடித்துவிடும்.''

இது, மதச் சுவர்களைக் கடந்து நெஞ்சை ஈர்த்தது.

''முகமதிய சாத்திரங்களைக் கற்றுக்கொண்டால் ஹிந்துக்களுக்கு அறிவு விசாலப்படும்'' என்ற மகா கவி பாரதியின் வாக்கு நினைவுக்கு வந்தது.
சென்னை சுப்ரபாலன்

● ஆருத்ரா தரிசனம் -மிலாடி நபி இரண்டும் இணைந்து வருகிறது. இந்த இந்து-முஸ்லிம் ஒற்றுமையைப் பார்க்கும்போது அமரர் கண்ணதாசனின் 'சேரமான் காதலி'தான் நினைவுக்கு வருகிறாள்.

மதம் மாறும் சேரமான் கடைசி முறையாக சிவன் கோவிலுக்கு வருகிறான். ''நாளை முதல் நான் முஸ்லிம் ஆகிவிடுவேன். இது காறும் சிவலிங்கமே, உம்மை வழிபட்டேன். இனி சிவனாரே, நும் தலைப் பிறையை வழிபடுவேன்'' என்கிறான்.

என்ன கற்பனைச் செழிப்பு!
சென்னை-11 ஹேமா

# Wake up. The times have changed.







New Philips Quartz Control Clock Radio

It's a marvel of technology and thoughtfulness. Set it on 'slumber' and drop off to sleep, and it switches off. Automatically. And it wakes you up with music, news, or a 'buzz'. Touch 'snooze', and it lets you sleep 10 minutes longer.

A powerful two-band radio. Or an accurate quartz clock that switches over automatically to 'battery' when mains fail.

Anyway you look at it, it's a winner. The kind only Philips technology can bring you.

## From Philips, the trusted Indian household name for over fifty years.

Peico Electronics & Electricals Limited

**PHILIPS**

CASPR 841 003

# உய்யக் கொண்டான் திருமலை

பொன்மலை பரிமளம்



உய்யக் கொண்டான் திருமலைக் கோயிலின் வெளிப்புறத் தோற்றம்



கோயில் நுழைவாயில் உட்புறத்தோற்றம்

## திருத்தலம் கண்டேன்

உய்யக்கொண்டான் திருமலை, திருச்சிக்கு மேற்கே ஐந்து கிலோ மீட்டர் தூரத்தில் குமாரவயலூர் செல்லும் வழியில் உள்ளது. தேவாரம் பாடப்பெற்ற இப் புனிதத் தலத்தைத் 'திருக்கற்குடி' என்றும் அழைப்பார்கள்.

இறைவன் கல்லில், அதாவது மலையில் குடியிருப்பதால் திருக்கற்குடி என்றும், உயிர்களை உய்யக் கொள்வதற்கு எழுந்தருளியமையால் உய்யக் கொண்டான் திருமலை என்றும் பெயர்கள் வழங்கியதாகஸ்தல புராணம் கூறுகிறது.

உய்யக்கொண்டான் திருமலைக் கோயில் மாடக் கோயில் அமைப்பில் இரண்டடுக்காகக் கட்டுப்பட்டுள்ளது. சுமார் ஐம்பது அடி உயரமுள்ள பாறையின் மேல் அழகாகக் கட்டப்பெற்றுள்ளது.

உய்யக்கொண்டான் திருமலையில் உறையும் உச்சிநாத சுவாமி சுயம்பு மூர்த்தி ஆவர். மைதீட்டப்பெற்ற கண்களை உடைமையால் அஞ்சனாட்சி அம்மை என்று தேவியார் திருநாமம் வழங்கப்படுகிறது.

பொதுவாகக் கோயில்களில் ஒரு அம்பாள் சந்நிதிதான் இருக்கும். இக்கோயிலில் ஒரே அம்பாளுக்கு இரண்டு சந்நிதிகள் உள்ளன, பழைய அம்பாள் சந்நிதி மேற்கு நோக்கி உள்ளது. இந்த அம்பாளின் இடது கரத்திலிருந்த நீலப் பூவின் இதழ் ஒன்று உடைபட்டமையின் பிற்காலத்தில் புதிய அம்பாளைக் கிழக்கு நோக்கிப் பிரதிஷ்டை செய்துள்ளார்கள். பழைய அம்பாளை அப்புறப்படுத்த முயன்றபோது அம்பாள் கோயில் அதிகாரிகளின் கனவில் தோன்றித் தன்னை அப்புறப்படுத்தாமல் அங்கேயே அமைக்கும்படி கூறியதால் அவ்வாறே செய்து இரண்டு அம்பாளுக்கும் வழிபாடு நடக்கிறது.

மார்க்கண்டேயர், அருணகிரியார், ஈழ நாட்டரசன் முதலியோர் இத்தலத்துப் பெருமானை வழிபட்டதாகக் கூறுகிறார்கள். மூல லிங்கத்தின் சிரசில் இரண்டு சிறிய குழிகள் உள்ளன. இவை மார்க்கண்டேயருக்கு அருள் செய்த காரணமாக ஏற்பட்டுள்ளன என்று சொல்கிறார்கள்.

இக்கோயிலில் குடிகொண்டிருக்கும் பெருமானுக்குப் பூஜைக் காலங்களில் தேங்காய் உடைப்பதில்லை. பழம்தான் நிவேதனம்.

உறுதியான மதில்களைக் கொண்டதாகையால் உய்யக்கொண்டான் திருமலைக் கோயில் 18ம் நூற்றாண்டில் ராணுவ வீரர்கள் தங்குவதற்குரிய யுத்த அரணாக மாறியிருக்கிறது. கர்நாடகப் போரில் பிரெஞ்சுக்காரர்களும், ஆங்கிலேயர்களும் மைசூர்க்காரர்களும் கூட இக்கோயிலைப் பயன்படுத்திக் கொண்டிருக்கிறார்கள்.

**ம**ணி ஆகிவிட்டது. எல்லோரும் வேக வேகமாக இயங்கிக் கொண்டிருந்தனர் மூட்டை கட்டுவதற்கு.

''வரலையா?'' என்று கேட்டாள் ஃபிலோமினு. மல்லிகா பிரமை பிடித்தவள் போல உட்கார்ந்திருந்தாள்.

''ஒனக்கென்னமா, பஸ்ஸிலே ஏறினு புரசைவாக்கம் குளத்திலே இறங்கி ஐம்முனு நடந்து போயிடுவே. நாம் போகணுமே செங்கல்பட்டு. காஞ்சிபுரம் பாசஞ்சரிலேயே வாழ்நாள் கழிஞ்சிடும் போலயிருக்கு'' என்ருள் மிகுந்த அசுவாரஸ்யத்தோடு. பிறகு எழுந்தவள் தன் கைப் பையை ஃபிலோமினுவிடம் நீட்டி, ''கொஞ்சம் பிடி, வர்ரேன்'' என்று சொல்லிவிட்டு டாய்லெட்வரை போய் விட்டு வந்தாள்.

இவள்தான் எப்படிப் போய்விட்டாள்! என்று நினைத்த ஃபிலோமினு தன் தோழியை ஒரு மாதிரியாகப் பார்த்தாள். சும்மா ஒரு வருஷந்தான். கல்யாணமாகி ஒரேயொரு வருஷந்தான் மல்லிகாவின் வாழ்க்கையில் ஓடியிருக்கிறது. அதில்தான் என்னமாய் மாறிப் போய்விட்டாள்! முன்பெல்லாம் ஆபீஸ் முடிய கால் மணி இருக்கையில் மல்லிகா எழுந்து போய்த் தன்னைத் தத்ரூபமாய்ப் புதுப்பித்துக் கொண்டு வந்துவிடுவாள். எட்டு மணி நேரம் சர்க்கார் அலுவலகத்தில் நாற்காலி தேயக் குப்பை கொட்டின குமாஸ்தா அலுப்பு அவளிடம் தெரியவே தெரியாதபடிக்குப் புத்துணர்ச்சியுடனிருப்பாள். தினமொரு புடவையில்—அதற்குப் பொருந்தும்படியாய் ரவிக்கையில்—அதே நிறத்தில் வாட்சுப் பட்டையோடு, அதே நிறத்தில் நெற்றிப் பொட்டிட்டு அதே நிறத்தில் வளையல் எல்லாம் குலுங்க அவள் நடமாடிய நாட்களை ஃபிலோமினு நினைத்துக் கொண்டாள்.

''மல்லி, என்ன வச்சிருக்கே பையிலே, கனக்குது?'' என்று கேட்டபடியே ஜிப்பைத் திறந்தாள் ஃபிலோமினு.

''டிஃபன் பாக்ஸ்தான் இருக்கு. வேறெ ஒண்ணுமில்லையே.''

''மணக்குதேடி?''

''ஆமா ஃபிலமி, கொண்டுவந்த சாதம் அப்படியே இருக்கு. சாப்பிடலே....''

பிலோமினு தன் தோழியைப் பார்த்தாள். அன்றுஃபிலோமினுவேறொருத்தியுடன்சேர்ந்து கொண்டு அசைவ உணவு சாப்பிடுவதற்காக ஹோட்டலுக்குப் போய்விட்டபடியால் மல்லிகா சாப்பிட்டது, சாப்பிடாதது தெரிந்திருக்கவில்லை.

''அடிப் பாவி, ஏன் சாப்பிடல்லே, பசி இல்லையா?''

''எதுவுமே பிடிக்கல்லே.''

''ஒருவேளை நாக்குக்குப் புளிப்புக் கிளிப்பாய்க் கேட்கிறதோ?''

''இன்னும் அது ஒண்ணுதான் பாக்கி போதாததுக்கு. நீ ஒருத்திதான் பாக்கி இருந்தே. நீயும் கேட்டுட்டே'' என்று சொல்லிவிட்டு வாய்விட்டு விரக்தியோடு சிரித்த மல்லிகா காலையில் ஆபீசில் நுழையும்போதே அம்புஜம் விசாரித்ததையும் நினைத்துக் கொண்டாள். காலையில் இவளையே பார்த்துவிட்டு ஹெட் கிளார்க் அம்புஜம் கேட்டாள்.

''குளிச்சிண்டிருக்கயோன்னே?'' — வேக வேகமாய் ஆசை ஆசையாக இதைக் கேட்ட போது அம்புஜத்தின் இமைகள் கண்ணடிக்குள் படபடத்தன. மல்லிகாவுக்கு ஆத்திரமாத்திரமாக வந்தது.




''நன்னுக் குளிச்சிண்டிருக்கேன்'' என்று மிதித்துத் தேய்ப்பது மாதிரி அழுத்திச் சொன்னாள்.

பேசிக்கொண்டே இருவரும் ஆபீசிலேயே உட்கார்ந்திருந்ததில் நேரம் போய்விட்டிருந்தது. ஆறாகிவிட்டது. கேர் டேக்கர் வந்து விசாரிக்கவும்தான் கிளம்பினர்கள்.

பஸ் ஸ்டாப்பை அடைந்த ஃபிலோமினா மல்லிகாவைக் காப்பி சாப்பிட்டு விட்டுப் போகும்படி வற்புறுத்தி இழுத்தாள். காப்பி சாப்பிடுகையில் கண்ணை மூடியபடி கூறினாள்



''அங்கே போறதுக்கே பிடிக்கல்லே. இன்னைக்கு நான் போகப் போறதில்லே ஃபிலோமினா. அம்மா வீட்டுக்கே போயிடப் போறேன்.''

''ஏண்டி நேரா இங்கே வராமே அம்மா வூட்டுக்குப் போய்த் தங்கினேன்னு ஆரம்பிச்சாங்கன்னா?'' என்று கேட்டாள் ஃபிலோமினா.

''பார்க்கலாம்'' என்றாள் மல்லிகா.

''அப்போ எங்க வீட்டுக்குப் போயிட்டுப் போவயாம் வா'' என்று இழுத்தாள் ஃபிலோமினா. அதுவும் பிடித்தது இவளுக்கு. புறப்பட்டு விட்டாள்.

வேலைக்குப் போகும் பெண் வேண்டாமென்று சொல்லிக் கொண்டதோடு போய் விட்ட ஒருவனைத் தொடர்ந்து கல்யாணத்துக்குப் பிறகு விரும்பினால் எப்போது வேண்டுமானாலும் வேலையை உதறிவிட்டு வீட்டோடு இருந்துவிட வேண்டும் என்று பேசினவனை மல்லிகாவே நிராகரித்து விட்டாள். அடுத்து வந்தவன்தான் சந்திரமௌலி. வேலைக்குப் போகும் பெண்தான் அவன் தேடிக் கொண்டிருந்ததும். கல்யாணத்தைச் சட்டென முடிக்க வைத்து விட்டது. புக்ககத்தில் கூட்டம் அதிகம். மாமியார் மாமனார், கல்யாணமாகாத நாத்தனார், கல்யாணமாகி ஒரு குழந்தைக்குத் தாயான — கணவனால் தள்ளி வைக்கப்பட்ட — வேலைக்குப் போகும் ஒரு நாத்தனார் என்று அவளுடைய புக்ககம் இருந்த அளவுக்கு வீடு போதாது. தனிமை என்பது மிக மிக மிக அரிதான விஷயமாய்ப் போய்விட்டது அங்கே மல்லிகாவுக்கு. மன்னி என்ன செய்கிறாள் என்று சதா வேவு பார்க்கும் சின்ன நாத்தனார். அவளைஒற்று வேலை பார்க்க அனுப்பிவைத்து விட்டு மருமகளின் காரியங்களில் குற்றம் குறை அகப்படாதா என்று கிடக்கும் மாமி. ஸ்திரிகள் சிரித்துப் பேசினால் வயிறு பற்றி எரியும் பெரிய நாத்தனார். அம்மாவுக்குப் பாத பூஜை செய்து கோயிலில் வைத்துக் கும்பிடும் சந்திரமௌலி. எல்லோருக்கும் தஞ்சாவூர் உருட்டுச் செட்டிப் பொம்மையாட்டமாடும் மாமனார் ஆகிய இந்தக் கும்பலில் அவள் மாட்டிக் கொண்டு திசை தெரியாது திக்குமுக்காடத் தொடங்கியிருந்தாள்.

கல்யாணமான புதிதில் சின்னச் சின்ன சோதனைகள் பூதாகாரமாய் அவளைப் பயமுறுத்தியிருக்கின்றன. கொஞ்ச நாட்களாய் மாமியாரும் நாத்தனார்களும் குசுகுசுவென்று இருந்தது ஒரு நாள் வெடித்தது.

மல்லிகாவுக்கு அவளுடைய பெற்றோர்கள் போட்டனுப்பியிருந்த நகைகளைக் கொண்டு போய் நிறுத்துப் பார்த்து விட்டு வந்து சந்திரமௌலியின் அம்மா சொன்னாள், ''பதினைஞ்சு பவுன்னு சொன்னாரே உங்கப்பா, பதிமூணுதானே இருக்கு'' என்று. சந்திரமௌலி கல்யாணவெள்ளிப்பாத்திரங்களையும் எடுத்துச் சென்று நிறுத்துப் பார்த்துக் கொண்டு வந்தான்.

''போய் ஒங்கப்பா கிட்டச் சொல்லு. பதினைஞ்சுக்குப் பதிமூணு பவுன்தானிருக்காம்னு. பதினைஞ்சு பவுனுக்கு நகை போட



இவர்: ''ரெண்டு வருடம் முந்திகூட உங்க கடையில் வெண்ணெய் வாங்கினேன் சுத்தமா இருந்தது.''

கடைக்காரர்: ''நம்பிக்கையா வாங்குங்க சார். அதே வெண்ணெய்தான்.''

- கீழை அ. கதிர்வேல்

றேன்னுட்டுப் பதிமூணுநாளிருக்கு. ஏமாத்தலா?'' என்று சத்தம் போட்டாள் மாமியார்.

ஒரு நாள் இவளுடைய அகௌண்ட்ஸ் ஆபீசர் கூப்பிட்டனுப்பினுரென்று போய் நின்ருள். வேலையில்தான் தான் ஏதாவது தப்புச் செய்து விட்டிருப்போமோ என்ற உதறலிலிருந்தாள்.

''ஒன்னேட ஹஸ்பெண்ட் எனக்கு எழுதிக் கேட்டிருக்கிருரம்மா. உன்னேட சம்பள சர்ட்டிபிகேட் ஒண்ணு வேணும்னு. இவளுக்கு அதிர்ச்சியாக இருந்தாலும் சமாளித்துக் கொண்டு கௌரவத்தைக் காப்பாற்றுவது போல் சொன்னுள்.

''புது ரேஷன் கார்டு வாங்குவதற்காக இருக்கும் சார்.....''

ஏ. ஓ. புன்னகைத்து விட்டுச் சொன்னர்:

''டிபார்ட்மெண்ட்லே சம்பளத்திலே ஒனக்கு என்னென்ன பிடித்தங்கள் பிடிச்சிக்கிருங்க, எதெதுக்கு எவ்வளவு லோன் வாங்கியிருக்கேங்கற விவரத்தையும் தனக்குத் தெரியப்படுத்தணும்னு கேட்டிருக்கார்.''

இவள் மௌனமாக வெளியேறிவிட்டாள். ஒருவகையில் அவமானமாகக்கூட இருந்தது அவளுக்கு. ஃபிலோமினுவிடம் மட்டும் சொல்லிக் கண்ணீர் உகுத்தாள்.

விடியற்காலே நாலு மணிக்கு அலாரம் வைத்து எழுப்பி விடுவாள் மாமியார். இவளை மட்டும் எழுப்பிவிட்டு அவள் தூக்கத்தைத் தொடர்ந்துவிடுவாள். அங்கக்கெல்லாம் போய்ப்பால் வாங்கிக்கொண்டுவரவேண்டும். காப்பி போட்டு ஒவ்வொருவருக்காகப் பள்ளியெழுச்சி பாடி நீட்ட வேண்டும். காலே ஒரு வேளை மட்டும் — மருமகள் ரயிலேறிமெட்ருக்கு வேலைக்குப் போகிருளேயென்று மாமியாரின் சமையல் — காமா சோமாவென்று.

சினிமாவுக்குக்கூட நாத்தனர்கள் புடைசூழத்தான் அவளைச் சந்திரமௌளி அழைத்துப் போவான். அவளுக்குச் சீக்கிரமே அலுத்துப் போனவற்றில் கணவனேடு சினிமாவுக்குப் போகும் விஷயமும் ஒன்று.

மோகம் முப்பதே முப்பது நாள்தான் என்று சந்திரமௌளி இவளிடமிருந்து விலகிக் கொண்டாற்போல் நடந்து வருவதையும் ஃபிலோமினுவிடம் சொல்வதுண்டு. கொஞ்சம் கொஞ்சமாக அந்த அதிர்ச்சி கூட இவளுக்குச் சாதாரணமாகி வருகிறாற்போல் தோன்றுகிறது.

ஒருமுறை அம்மா வந்திருந்தபோது தாட்சண்யம் இல்லாமல் கேட்டார்கள்.

''ஒங்க பொண்ணுக்கு ஏதாவது உள்ளூற வியாதி இருக்கோ? வருஷம் ஆறது... நிக்கவே மாட்டேன்றதே... எங்க சந்திரமௌளி ஆபீஸ்லே சிநேகிதங்கெல்லாம் பிடுங்களாம்.... எல்லாரையும் போல் காலா காலத்திலே நாங்களும் பிள்ளை வயத்துப் பேரனேயோ பேத்தியையோ பாக்க வேண்டாமோ...எங்க வச்சு இருக்காளே, எண்ணிப் பதினேராம் மாசத்திலே பிரசவத்துக்கு வந்துட்டா....''

ஆதரவு மிக்க பார்வையுடன் தன் தோழியையே பார்த்துக் கொண்டிருந்தாள் ஃபிலோமினு. ''என்ன, மப்பா இங்க் பண்றே?'' என்று உலுக்கிஞள்.

''அம்மா வீட்டிலே ஏன் தங்கினேன்னு சண்டைக்குக் கிளம்பிடுவாங்க. கர்மம், இருக்க முடியல்லே அங்கே'' என்ருள் மல்லிகா துக்கம் படர.

ஃபிலோமினு இவளையே கொஞ்ச நேரத்துக்கு விடாமல் பார்த்தபடி யோசித்துக் கொண்டிருந்துவிட்டுக் கையைச் சொடுக்கிஞள்.

''ஒரு யோசனை தோணுது... சொல்றேன் செய். பார்க்கலாம்'' என்றான். சொல்லி விட்டுச் செய்தித் தாளிலிருந்து வெட்டி எடுத்து வைத்திருந்த செய்தித் துண்டை அவளிடம் கொடுத்தான். மல்லிகாவின் கண்கள் செய்தி மீது ஓடின. சமீபத்தில் புக்ககக் கொடுமை தாங்காமல் தன் அலுவலகக் கட்டிடத்தின் மேலிருந்து குதித்து விழுந்து உயிரைப் போக்கிக் கொண்ட பெண்ணின் பரிதாப விஷயம் அது. ஒரு தீர்மானத்துக்கு வந்தவளாய் எழுந்து புறப் பட்டாள், மல்லிகா.

**"ஒ**ரு வாரம் எங்கே போயிருந்தே? நீ என்னன்னு நெனைச்சுண்டே? வாழுற வீடா இது இல்லே.... நா அசிங்கமாக் கேட்டுடு வேன். யாரைக் கேட்டுண்டு ஒங்கம்மா வீட்டுக்குப் போனே? நீயா தனியா எப்படி வருவே? ஒங்கப்பனையும் அம்மாவையும் உடனே வரச் சொல்லிக் கடுதாசி எழுதிப் போடு. பேசறேன்'' – மல்லிகாவின் மாமியார் படமெடுத்துச் சீறினாள்.

மல்லிகா தன் மாமியாரை நெருங்கி நின்று நிதானமாகச் சொன்னாள்.

''கத்தாதீங்கோ. கத்தக் கத்த மரியாதைதான் குறையும். சின்னக் குழந்தை மாதிரி விரட்டாதீங்கோ. எனக்குண்டான நியாயமான கௌரவத்தையும் மரியாதையையும் சுதந்திரத்தையும் கொடுத்துப் பழகுங்கோ. அனாவசியத்துக்கெல்லாம் கட்டிக் கட்டிண்டு சண்டை போடாதீங்கோ. வேணும்னா, பிடிக்கலேன்னா டைவர்ஸ் பண்ணிக்கிடலாம். சும்மா சும்மா தொந்தரவு குடுத்துண்டே போனேன்னா தாங்கறவரைக் கும்தான் தாங்குவேன். அப்புறம் ஒரு நா இது மாதிரி பண்ணிண்டுடுவேன். எல்லாப் பழியும் ஒங்க மேலே விழுறாப்பல கடுதாசி எழுதி வச்சுட்டே போவேன்... ஆமா....''

மல்லிகா கண்ணாடிச் சட்டம் போட்ட படம் ஒன்றை மின்னல் வேகத்தில் சுவரிலிருக்கும் ஆணியில் மாட்டிவிட்டுத் தன் அறைக்குள் நுழைந்தாள்.

மாமனார், மாமியார், நாத்தனார்கள், கடைசியாகச் சந்திரமௌலி என்று எல்லோரும் ஒவ்வொருவராகச் சுவரை நெருங்கிக் கண்ணாடிச் சட்டத்தில் இருக்கும் தினசரிச் செய்தியைப் படித்து முடித்தனர். அவர்களுக்குள் படபடப்பு அதிகரித்தது. மல்லிகாவின் மாமியாருக்கும் நாத்தனார்களுக்கும் பீதி பிடறியை உலுக்கத் தொடங்கிற்று.

முதலில் அந்தப் படத்தை அகற்றிவிடலா மென்று நினைத்தவர்கள் ஏவல் பில்லி சூன்யம் செய்து கட்டித் தொங்க விடப்பட்ட தகட்டுக்கு உதறல் கொண்டது போல் பயப்படத் தொடங்கினார்கள். கடைசியாகத் தங்களுக்குள்ளாகவே பேசிக் கொண்டார்கள்.

''மல்லிகாவைக் கேட்டுண்டு அவளையே எடுத்துடச் சொல்லலாம். நாமளா எடுக்க வேணாம். அவளே வரட்டும். ஆறு எடுத்துடணும். நாலு பேர் இதைப் பார்த்தா ரொம்ப அசிங்கமாய்ப் போயிடுமே....''

கொடுமை தாங்காது கட்டிடத்திலிருந்து குதித்து உயிர் விட்ட ஒருத்தியின் செய்தி கொண்ட பத்திரிகைச் செய்தி அடங்கிய கண்ணாடிச் சட்டம் காற்றுக்கு அசைந்து சுவரில் உராய்ந்து கிர்க் கிர்க்கென்று ஓசை எழுப்பியபடி இருந்தது.



# பொக்கிஷம்



K. Balachander

34, WARREN ROAD · MADRAS 600 004 · PHONE: 72074

K. BALACHANDER

15/9/77

My dear 'Rascal'

What a consummate artistry you have shown.

There is only one word "BEAU

Keep it up...

Affly yours

To
Sri Kamal Hasan
2 Eldams Road
Madras 18

**கமலஹாசன்** சொல்கிறார் :

"எனக்கு வந்த கடிதங்களில் 'பொக்கிஷம்' எனக் கருதி நான் பாதுகாத்து வருபவை இரண்டு. அவை இரண்டையுமே எழுதியவர் என் மதிப்புக்குரிய பாலசந்தர்தான்" என்றபடியே ஃப்ரேம் போடப்பட்ட இரண்டு கடிதங்களைக் காட்டுகிறார். தமிழில் எழுதப்பட்ட கடிதத்தைக் காட்டிச் சொல்கிறார்: "நூறு படங்களில் நான் நடித்து முடித்ததைச் சிறப்பிக்கும் விழா ஒன்றுக்கு டைரக்டர் பாலசந்தர் உடல்நிலை சரியில்லாததால் வரமுடியவில்லை. என்னைத் தமது வீட்டுக்கு வரச் சொன்னார். அவரை வணங்கியபோது வாழ்த்தி, முன்பே எழுதி வைத்திருந்த கடிதத்தைக் கொடுத்து, 'இதை இங்கேயே படி' என்றார். கண்களில் நீர் துளிக்கப் படித்தேன்.

"மற்றொரு கடிதம் 'பதினாறு வயதினிலே' படத்தைப் பார்த்துவிட்டுப் பாசம் மிகுதியால், 'மை டியர் ராஸ்கல்!' என விளித்து பாலசந்தர் எழுதியது. என் நடிப்புத் திறமைக்குக் கிடைத்த மிகப் பெரிய பரிசு இதுதான்."

பேட்டி: எஸ். சந்திரமௌலி

Printed by V. Murali and Published by V. Vaidyanathan on behalf of Messrs Bharathan Publications Private Ltd, at the Bharathan Press Race Course Road Guindy. Madras-600 032. (Phone: 431543)

Assistant Editor: P.S. Mani

Editor: K. Rajendran



AVM
பவுன் மார்க்
தேங்காய் எண்ணெ
பரிசுத்தமானது! பிரசித்தமானது
சுவைமிக்க மோறு, மோறு உணவு படைக்கவும், கரு கரு கூந்தல் வளரவும் சிறந்தது AVM பவுன் மார்க் தேங்காய் எண்ணெ. சுத்தமும், சுகாதாரமும் கொண்ட தயாரிப்பு.
16, 4, 1.5 கிலோ டின்களிலும், 1 கிலோ, 500 கிராம் அழகிய பிளாஸ்டிக் கேன்களிலும், கையடக்க பிளாஸ்டிக் பாட்டில்களிலும் கிடைக்கின்றன.
தயாரிப்பாளர்கள்:
AVM மாரிமுத்து நாடார் & சன்ஸ்
தூத்துக்குடி-628 001
AVM SOVEREIGN MARK COCOANUT OIL
ADWAVE AVM/1692

REGISTERED No. M 4362
Registered as a Newspaper in Sri Lanka